# RAJAJI-93 SOUVENIR

A collection of tributes, reminiscences and experiences from many distinguished and eminent personalities from India and abroad and profusely illustrated with pictures portraying the many events in Rajaji's long and unique life.

**With each copy of the Souvenir is given free a standard 45 RPM disc carrying**






*(Rajaji's talks are on 'God-fearing life' on one side of the disc and on 'World Government' on the other side)*

A sumptuous and high-class production with more than 300 pages in 'Life' magazine size and priced at Rs. 12/- per copy plus Rs. 1.50 to cover packing, postage and registration charges.

Only a limited number of copies are printed of the Souvenir and therefore copies are reserved in the order of remittances received at the rate of Rs. 13.50 per copy inland and Rs. 25/- per copy abroad by sea mail.

The publishers of "Rajaji-93 Souvenir" have also great pleasure in offering a complimentary copy of RAJAJI-93 SOUVENIR along with the disc carrying the Voice of Rajaji to those who subscribe to 'Swarajya' for three years and remit Rs. 45/- in advance to the **Manager, Swarajya, Madras-31** on or before 10th December 1971 when Poojya Rajaji completes his ninety-third year.

In response to the request of several hundreds of regular readers of **Kalki**, the Publishers of "Rajaji-93 Souvenir" have also decided to offer a complimentary copy of "Rajaji-93 Souvenir" along with the disc carrying the voice of Rajaji to a limited number of the regular readers of Kalki who send Rs. 46/- in advance covering two years subscription for Kalki and the cost and postage of a copy of Kalki Deepavali Malar 1972 to the **Manager, Kalki, Madras-31**, on or before 10th December 1971.



**T. Sadasivam**

Convener, Rajaji-93 Souvenir Committee
Kalki Buildings, Chetput, Madras-31
Phone: 61034

# புதிய லேவெண்டர் அற்புதம்




ஒய்யாரம்.
நீங்காத
நறுமணம்.

## லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க்

லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க் நவீன யுகத்தின் நறுமணம். அதைத் தூவிக் கொண்டால், நறுமணப் பொய்கையில் நீராடியது போன்றிருக்கும்! அத்தனை மனம் கவரும் மணம் கமழும்! அதிமென்மையானது: அதி மேன்மையானது: புதுமலர்ச்சி பூப்பது. ஒவ்வொரு நாளும் லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க் தூவி, இன்பத்தில் திளைப்பீர். அந்த அற்புதமான அனுபவம் பெறுவீர்...இன்றும்... என்றும்!



லக்மே டால்க் ஐந்து வகை நறுமணங்களில் உங்களை அடைகிறது: லேவெண்டர், வெட்டிவேர், நிர்வாண், சந்தனம் மற்றும் ஃப்ளோரல் மிஸ்ட்.

ASP/L-82




# கல்கி பொருளடக்கம்

**விரோதிக்ருது ஐப்பசி 21 - நவம்பர் 7, 1971**



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம் | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 45-00 | ரூ. 22-50 |

பகல் முழுதும்
கடினமான வேலைக்குப் பிறகு...

புத்துயிரளிக்கும்
நெஸ்கா:பே ஒரு கப்
அருந்துங்கள்
–5 செகண்டில் தயார்!






முற்றிலும் சுத்தமான காப்பி—தென்னிந்திய
காப்பி விதைகளிலிருந்து தயாரிக்கப்பட்டது

# நெஸ்கா:பே

உணர்ச்சி ஊட்டும் நெஸ்கா:பே
ஊக்கமளித்திடும் நெஸ்கா:பே!




NCE 6369

ஒரு நெஸ்லே தயாரிப்பு



தமிழ்த் திருநாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# ஐ. நா.வும் சீனாவும்

ஐ. நா. சபையில் தைவான் தனது ஸ்தானத்தை இழந்து விட்டது. அதன் இடத்தைக் கம்யூனிஸ்ட் சீனம் பெற்று விட்டது.

ஐ. நா. சபை இரண்டு சீனங்களை அங்கீகரித்து, தைவான், கம்யூனிஸ்ட் சீனம் ஆகிய இரண்டுக்கும் இடம் அளிப்பதற்கில்லை; எனவேதான் தைவானை நீக்கிவிட்டுச் செஞ்சீனத்தை அநுமதிக்க வேண்டியதாயிற்று என்று ஒரு சமாதானம் சொல்லப் படுகிறது. ஆனால் சுதந்திர நாடாக இயங்கி வரும் தைவானுக்கு ஐ. நா.வில் ஸ்தானம் இல்லாமற் செய்வதற்கு இந்தச் சமாதானம் உதவாது. தைவானைவிட முக்கியத்துவத்தில் குறைந்த எத்தனையோ சிறிய நாடுகளுக்கு ஐ. நா.வில் இடம் இருக்கையில் தைவானுக்கு இடமில்லை என்று செய்திருப்பது தர்மமாகாது.

தைவானை ஐ. நா.விலிருந்து அகற்றியிருப்பது, கம்யூனிஸ்ட் சீனத்தின் சார்பில் உலக மகாசபையே தைவானை அழித்துவிட்டதற்குச் சமானமாகும்.

சீனத்தில் பிரத்தியட்சமாக இருபதாண்டுகளுக்கு மேலாக அரசோச்சி நிருவாகம் நடத்தி வரும் கம்யூனிஸ ஆட்சியைச் சீனத்தின் பிரதிநிதியாக ஐ.நா.வில் அநுமதிப்பது நியாயமேயாகும். ஆயினும் இதற்காகத் தைவானை வெளியேற்ற வேண்டியதில்லை. செஞ்சீனாவை ஐ. நா.வில் அநுமதிப்பதற்குப் பலமான காரணங்கள் உண்டு எனில், தைவானுக்கும் தொடர்ந்து ஸ்தானம் தருவதற்கு அதை விடப் பலமான காரணங்கள் உள்ளன.

தைவான் ஐ.நா.வில் இருக்கும்வரையில், தான் அச்சபையில் அங்கம் வகிக்க முடியாது என்று செஞ்சீனம் தீர்மானித்ததால்தான் தைவானை வெளியேற்ற நேர்ந்தது என்றும் ஒரு காரணம் சொல்லப் படுகிறது. செஞ்சீனத்தை இனியும் தாமதிக்காமல் ஐ. நா.வில் அநுமதிக்க வேண்டும் என்று உலக நாடுகளில் பல எண்ணியதற்கு நியாயம் இருக்கலாம். இருப்பினும் அதன் பொருட்டுத் தைவான் ஆதியிலிருந்து அநுபவித்து வந்த நியாயமான உரிமையை மறுதலித்திருப்பது நீதியாகாது.

ராஜதந்திரப்படி அவசரமாகச் செயல்பட வேண்டியிருந்தது என்று சொல்லி ஓர் அநீதியை ஏற்றுக்கொள்ளுமாறு செய்ய முடியாது. தைவானை வெளியேற்றினாலே, தான் அங்கம் வகிக்க முடியும் என்று பிடிவாதம் பிடித்த செஞ்சீனம், அதன் போக்கை மாற்றிக் கொள்வதற்கு இன்னும் சிறிது அவகாசம் கொடுத்திருக்க வேண்டியதே ''ராஜதந்திர''மாகவும் இருந்திருக்கும். ஆரம்பத்தில் ஐ. நா. சபையை நிறுவுவதற்குக் காரணமாகவிருந்த நாடுகளில் ஒன்றுக்கு, ஐ. நா. சாஸனத்தையும் மீறி, அநீதி செய்து விட்டார்கள்!

தைவானின் அந்நிய மந்திரியான சௌ ஷு–கியே தமது நாட்டுப் பிரதிநிதிகளுடன் ஐ.நா.விலிருந்து விடை பெறும்போது, ''செஞ்சீனம் இங்கு இடம் பெற்றுவிட்ட பின் ஐ. நா. சபையே மாசேதுங்கின் முன்னணியாக மாறத் தொடங்கும்; சர்வ தேச அராஜகங்களின் நிலைக்களனாக மாறத் தொடங்கும்'' என்று கூறினார். இப்படி அவர் பயப்படுவதற்கு நிரம்ப ஆதாரமுண்டு. ஐ. நா.வில் செஞ்சீனாவை அநுமதிப்பதால் அந்த நாடு மற்ற வல்லரசுகளோடு இணைந்து செயல்பட்டு, தனது போக்

கைச் சமாதான ரீதியில் மாற்றிக் கொள்ளும் என்று எதிர்பார்ப்பவர்களும் உள்ளனர். ஆனால் சௌ என்—லாயே அஞ்சுவது போல நடப்பதற்கே சாத்தியக் கூறுகள் அதிகம் உள்ளன எனலாம். அப்படியே ஒருவேளை கம்யூனிஸ்ட் சீனம் எதிர்காலத்தில் தன் கொள்கையை மாற்றிக் கொள்ளக்கூடும் என்றாலும் கூட சுதந்திரத் தனி நாடான தைவானை உலக மகா சபையிலிருந்து வெளியேற்றியிருப்பதை ஒருவிதத்திலும் ஏற்பதற்கில்லை.

# ராஜாஜியின் கருத்துக்கள்

## தைவானும் ஐ. நா. வும்

தைவானை ஐ. நா. பொதுச் சபையில் வைத்திருப்பதற்காக அமெரிக்கா எடுத்த முயற்சி வெற்றி பெறவில்லை. இதனால் அமெரிக்காவுக்கும் ஐ. நா.வுக்குமிடையே மிகவும் விசனிக்கத் தக்கதொரு பிளவு ஏற்பட்டிருக்கிறது. ஐ. நா. ஒரு சக்தி வாய்ந்த உலக சர்க்காராக உருவெடுக்க முடியும் என்ற நம்பிக்கை தைவான் சம்பவத்தால் அடியோடு தகர்க்கப் பட்டுவிட்டது. ஜனாதிபதி நிக்ஸன் இந்தத் தோல்வியை மழுப்ப ஏதேனும் குளறுபடி செய்யலாம். ஆனால் அமெரிக்க மக்கள் தார்மிக ரீதியில் தங்கள் நாடு அடைந்து விட்ட தோல்விக்கு எளிதில் தங்களைச் சமாதானப்படுத்திக் கொள்ள இயலாது.

தைவானைக் குறித்து ஐ. நா. எடுத்த முடிவுக்கு இந்தியா ஆதரவு தந்தது குறித்து நான் ஆழ்ந்த வருத்தம் கொள்கிறேன்.

## பீதி நிறைந்த 'சமாதானம்!'

அண்டைத் தேசங்களுக்கிடையிலும், ஒவ்வொரு தேசத்திலுமுள்ள மாநிலங்களுக்கிடையிலும் சச்சரவும் பூசலும் நாள்தோறும் பெருகி வந்தாலும், உலக யுத்தம் என்பதன் சாத்தியக்கூறுகள் குறைந்தே வருகின்றன; அகில உலக ரீதியில் பார்க்கும்போது அது சமாதானத்தை நோக்கிச் செல்வதாகவே நிச்சயமாகத் தெரிகிறது — இவ்வாறு அமெரிக்காவின் புகழ்பெற்ற பத்திரிகாசிரியர் ஸ்ரீ டேவிட் லாரென்ஸ் கூறுகிறார்.

உலக யுத்த ஜோதி குறைந்து, சமாதானப் போக்கு வலுக்கிறது என்பது உண்மை. ஆனால் சமாதானத்துக்காகக் கைக்கொள்ளப் படும் உபாயம் என்ன? அணு ஆயுத ஒழிப்பு என்பதை எந்த வல்லரசும் மேற்கொள்ளவில்லையே! பரஸ்பர விசுவாசம் இன்னும் ஏற்படவில்லையே! அவநம்பிக்கையோடு இணைந்



துள்ள சமாதானம், வெடிமருந்துப் பீப்பாயின் மீது அமைதியாக உட்கார்ந்திருப்பது போன்றதே. எதிராளியை எதிர்பார்க்காமல் ஏதேனும் ஒரு வல்லரசு தன் அளவில் துணிவு பெற்று, தனது அணு ஆயுதங்களை அழிக்க வேண்டும். அப்போதுதான் உலகில் அணு ஆயுதங்கள் அடியோடு எடுபடும். அணு ஆயுதக் குவிப்பு நிற்காத வரையில் உலகில் வெளிப் பார்வைக்குச் சமாதானம் இருப்பினும், சர்வநாசம் பற்றிய மகத்தான பீதியும் உள்ளூற இருந்துகொண்டேதான் இருக்கும்.

வல்லரசுகள் பரஸ்பர நம்பிக்கை கொள்ள வேண்டும். இந்த நம்பிக்கை காரிய உருவில் வெளியாக வேண்டும். எத்தனை இடர்ப்பாடு நேரிடக்கூடும் எனினும், பிறரை எதிர்பாராமல் தன்னைப் பொறுத்தமட்டில் தீரத்துடன் சமாதான நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும். ஒரு வல்லரசு இப்படிப்பட்ட நடவடிக்கையில் ஈடுபட்டால் அதுவே மற்ற வல்லரசுகளுக்குப் பெருத்த நம்பிக்கையூட்டி, அத்திசையில் அவற்றையும் செலுத்தும். நம்பிக்கை நிலவ இதுவே வழி. உடன்படிக்கைகள் செய்துகொள்வதால் நம்பிக்கையை ஊக்குவது நிகழ்காலத்தில் முடியாது. உண்மைச் சமாதானத்துக்குச் சக்தி வாய்ந்த ஒரே உபாயம், வல்லரசுகளில் ஒன்று எதிர்த்தரப்பை எதிர்பாராமல் தானே தீரத்துடன் தனது ஆயுத பலத்தைக் குறைத்துக் கொண்டு, அதன் மூலம் மற்ற வல்லரசுகளையும் அவ்வாறு செய்யத் தூண்டுவதுதான்.

## நீதியும், நிர்வாகமும்

இந்திய வழக்கறிஞர்களுக்கும், நாட்டு விஷயங்களில் ஈடுபாடு கொண்ட மற்ற அறிஞர்களுக்கும் சமீபத்திய ஸுப்ரீம் கோர்ட் உத்தியோக நியமனங்கள் திருப்தி அளிக்கவில்லை. புதிய ஜட்ஜுகள் ஸுப்ரீம் கோர்ட்டின் சிறந்த சம்பிரதாயத்துக்கு உகந்த வகையில் உயர்ந்தாலும் உயரலாம், அல்லது அதன் அந்தஸ்தையும் மக்களுக்கு அதனிடமுள்ள நம்பிக்கையையும் தாழ்நிலைக்குக் கொண்டுவந்து அதைச் சர்க்காரின் ஓர் இலாகா போலவே ஆக்கினாலும் ஆக்கிவிடலாம் என்று தோன்றுகிறது. சென்ற பொதுத் தேர்தலின் தீர்ப்புப்படி, ஸ்ரீமதி இந்திரா காந்திக்குப் பூரணமான நிர்வாக அதிகாரம்தான் வழங்கப்பட்டதேயன்றி, நீதித்துறை அதிகாரம் அல்ல. தேர்தல் வெற்றியைக் கொண்டு அவர் சாஸனம் தருகிற அடிப்படை உரிமைகளை அகற்ற முடியாது. ஆனாலும் நிர்வாக அதிகாரத்தையே நீதித்துறை அதிகாரமாகவும் மாற்றிக் கொள்வது ஸ்ரீமதி இந்திராவுக்கு எளிதாகவே இருக்கிறது!

### அனந்தராமர் ஆராதனை

உபந்யாஸ சக்ரவர்த்தி ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்கள் ஆபத்ஸன்யாஸம் செய்துகொண்டு யதீந்திரர்களாகி ஸித்தி படைந்தது நினைவிருக்கும். சேலம் டவுனுக்கு அருகே உள்ள சின்னத் திருப்பதியில் அம்மகானின் அதிஷ்டானம் அமைந்துள்ளது. பல பக்தர்களின் ஒத்தாசையாலும், ஸ்ரீ எஸ். ஜி. ரத்தினமய்யர் அவர்களின் பக்தி சிரத்தையினாலும் அதிஷ்டானத்துக்குக் கோபுரம் கட்டிப் பூர்த்திசெய்து 7–11–71 ஞாயிற்றுக்கிழமை காலையில் மகா கும்பாபிஷேகம் வைத்திருக்கிறது.

நவம்பர் 5லிருந்து 9வரை ஸ்ரீ அனந்தராம யதீந்திரான் மறைந்த இரண்டாவது ஆண்டு ஆராதனையும் காலக்ஷேபங்களும், இசைக் கச்சேரிகளும் கும்பாபிஷேகத்தோடு சேர்ந்து நடைபெறும். பக்தர்கள் வைபவங்களில் கலந்துகொள்ள வேணும்.

## ராஜாஜி – 93

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

தாங்கள் 'ஸ்வராஜ்யா' சந்தாதாரர்களுக்குச் சில சலுகைகளை அறிவித்திருக்கிறீர்கள். அதேமாதிரி கல்கி சந்தாதாரர்களுக்கும் கூடச் சில சலுகைகளை வழங்க வேண்டும் என்று கோருகிறேன். எங்கள் கோரிக்கைக்கும் தாங்கள் செவிசாய்த்து விரைவில் சாதகமாக முடிவெடுப்பீர்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

ஜெய்பூர்<br>
25-10-71

**கே. ஏ. ராமச்சந்திரன்**

இம்மாதிரி நூற்றுக்கணக்கான சந்தா நேயர்கள் **ராஜாஜி - 93 மலர் அன்பளிப்புக்கு** ஒரு திட்டம் தீட்டக் கோரிக் கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள். கல்கி நேயர்களும் ராஜாஜி - 93 மலரை அன்பளிப்பாகப் பெற ஒரு வழி வகுத்துள்ளோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். இந்த ஆண்டு டிசம்பர் 10ந் தேதிக்குள் கல்கிக்கு இரண்டு ஆண்டுச் சந்தாத் தொகையும், 1972 தீபாவளி மலருக்கான விரயமும் தபால் செலவும் உள்பட மொத்தம் ரூ. 46/- செலுத்தினால் ராஜாஜி - 93 மலரை இலவசமாகப் பெறுவதோடு, ராஜாஜி அவர்களின் குரலடங்கிய கிராமபோன் ரிகார்டு ஒன்றும் மலருடன் வெகுமதியாகப் பெறலாம். ஏற்கெனவே சந்தாதாரர்களாக இருப்பவர்களும் இந்த ரூ. 46ஐ அனுப்பி ராஜாஜி - 93 மலரும், ரிகார்டும் அன்பளிப்பாகப் பெறலாம். அவர்களது சந்தா இப்போது முடியும் தேதியிலிருந்து இரண்டாண்டுகளுக்கு நீடிக்கப்படும். தொகை அனுப்ப வேண்டிய விலாசம்:

**மானேஜர், கல்கி, சென்னை - 31.**

**- ஆசிரியர்.**

# எல்லா உயிர்களின் திருப்திக்காக....

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

தேவதைகளை உத்தேசித்த யாகங்கள், பித்ருக்களை உத்தேசித்த தர்ப்பணம், ச்ராத்தம் இவற்றை விடாமல் செய்ய வேண்டும். இவற்றோடு தெய்வத்தை உத்தேசித்த பூஜை, அதிதிகளை உத்தேசித்து அன்னமிடுதல், சகல ஜீவராசிகளையும் உத்தேசித்த வைச்வதேவம் இவற்றையும் நம் முன்னோர்கள் செய்து வந்தனர். நீங்கள் இவற்றைச் செய்கிறீர்களோ இல்லையோ, காதிலாவது இவற்றைப் பற்றிக் கேட்டால் நல்லது. எத்தனையோ படித்திருக்கிறீர்கள், படிக்கிறீர்கள். எந்தெந்தத் தேசத்துச் சரித்திரங்களையோ தெரிந்து கொண்டிருக்கிறீர்கள். நம் தேசத்தில் யுகாந்தரமாக இருந்து வந்த தர்மங்களையும், அவற்றின் பெயர்களையாவது, நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்றே இதைச் சொல்கிறேன். 'வைச்வதேவம்' என்பது இவற்றில் ஒன்று. அது என்ன என்று சொல்கிறேன்.

நமக்கு இந்த உடம்பு இருப்பதால் எத்தனை ஜீவராசிகளுக்கு எத்தனை உபத்திரவம் விளைவிக்கிறோம்? நம் வீட்டைச் சுத்தமாக வைத்திருப்பதாகப் பெருமையுடன் எண்ணுகிறோம். ஆனால் யோசித்துப் பார்த்தால் ஒவ்வொரு வீடும் ஒரு கசாப்புக் கடையாகத்தான் இருக்க வேண்டியிருக்கிறது. 'ஒரு கசாப்புக் கடை அல்ல; ஐந்து கசாப்புக் கடைகள்' என்கிறது தர்மசாஸ்திரம்.

அந்த ஐந்து என்ன?

**பஞ்சஸூநா க்ருஹஸ்தஸ்ய வர்தந்தே**
**(அ)ஹரஹ: ஸதா |**
**கண்டிநீ பேஷணீ சுல்லீ ஜலகும்ப**
**உபஸ்கர: ||**

அரிவாள்மணை (கண்டினீ) ஒரு கசாப்புக் கடை. அதில்தானே காய்கறிகளை நறுக்குகிறோம்? காய்கறிகளும் உயிருள்ளவைதாம். அவற்றை வதைக்குமிடம் ஒரு கசாப்புக் கடை. இரண்டாவது, அம்மி, எந்திரம், உரல், நெல் மிஷின் இத்யாதி (பேஷணீ). இவற்றில்தான் கருணையே இல்லாமல் தானியங்களை அரைக்கிறோம். மூன்றாவது அடுப்பு (சுல்லீ). நெருப்பிலே பல பூச்சிகள் விழுந்து சாகின்றன. ஓர் இடத்தில் நெருப்பைப் போடுகிறோம், அங்கே ஓர் எறும்பு ஊர்ந்து கொண்டிருக்கும். நெருப்பு பட்டவுடன் அது பொசுங்கிப் போகிறது. இப்படியே குடத்தை ஓரிடத்தில் வைக்கிறோம். கீழே எறும்போ வேறு பூச்சியோ இருந்தால் நசுங்கிப் போகிறது. குடம் முதலிய ஜல பாத்திரங்களில் ஈரம் இருப்பதால் வெயில் காலத்தில் எறும்பு முதலியன அதை மொய்த்துக் கொள்கின்றன. அவற்றை நாம் கொல்ல நேருகிறது. இதனால் 'ஜலகும்ப'த்தையும் ஒரு கசாப்புக் கடையாக வைத்தார்கள். கடைசியில் 'உபஸ்கரம்' என்பது ஒரு கசாப்புக் கடை. 'உபஸ்கரம்' என்றால் துடைப்பக் கட்டை. பெருக்கும்போது எத்தனை ஜீவராசிகளை வதைக்கிறோம்?

நமக்கு ஒரு தீங்கும் இழைக்காத பிராணிகளை நாம் இத்தனை ஹிம்சைக்கு ஆளாக்க நேருகிறது. யோசித்துப் பார்த்தால் இத்தனை ஜீவராசிகளுக்கு இத்தனை உபத்திரவத்தை உண்டாக்கிக் கொண்டு வயிற்றை வளர்க்கிறோமே என்று துக்கம் உண்டாகிறது. ஆனால் இதெல்லாம் நம்மால் தவிர்க்க முடியாத விஷயங்கள். நம்மை மீறிச் செய்கிற இந்தத் தோஷங்களுக்குப் பிராயச்சித்தம் உண்டு. அப்படிச் செய்கிற பிராயச்சித்தமே 'வைச்வதேவம்' என்பது.

நம்மால் ஹிம்சைக்கு ஆளான ஜீவராசிகளுக்கெல்லாம் நல்ல கதி கிடைக்க வேண்டும், நம்மைப் பகவான் மன்னிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் எல்லா உயிர்களின் திருப்திக்காகவும் வைச்வ தேவ பலி கொடுக்கப்படுகிறது. இந்த விஷயத்தில் எவ்வளவு பிராணிகள் உண்டோ, நாய், காக்கை, சமூகப் பிரஷ்டன் உட்பட எல்லோருக்கும், எல்லாவற்றுக்கும் வைச்வதேவத்தில் பலி உண்டு. வைச்வதேவம் செய்தால் நாம் செய்கிற பல தோஷங்கள் விலகும்.

வைச்வதேவம், பூஜை, தேவயக்ஞம், மநுஷ்ய யக்ஞம் (விருந்தோம்பல்), பித்ரு யக்ஞம் (தர்ப்பணம் முதலியன) ஆகிய அனைத்தையும் பிரம்ம புத்திரர்களான ரிஷிகள் முதற்கொண்டு யாவரும் யுகம் யுகமாகப் பண்ணிக் கொண்டு வந்தார்கள். ஆதி காலத்திலிருந்து நம் தாத்தா காலம் வரையில் சாஸ்திரப் பிரகாரம் எல்லோரும் இவற்றை ஒழுங்காகச் செய்து வந்தார்கள். பிரளய காலம் வரையில் இவை அவிச்சின்னமாக (முறிவுபடாமல்) நடந்து வரவேண்டும். ஆனால் நம் நாளில் இந்த இழையைக் கத்திரித்துவிட்ட 'பாக்கிய'த்தை அடைந்திருக்கிறோம். அநாதிகாலமாக வந்துள்ள அநுஷ்டானங்களைக் கபளீகரம் செய்துவிட்டு, நம்மோடு மட்டுமல்லாமல், நம்முடைய பின் சந்ததியாருக்கும் நன்மை விளையாமல் தடுத்து விட்டிருக்கிறோம்.

நான் எத்தனையோ அநுஷ்டானங்களைச் சொல்கிறேனே, அவற்றில் எவ்வளவு நாம் பண்ணுகிறோம், எவ்வளவு பண்ணவில்லை, எவ்வளவு பண்ண முடியும் என்று யோசித்துப் பாருங்கள். எல்லாவற்றையும் பண்ண முடியாவிட்டாலும், ஜீவனோபாயத்தை அநுசரித்து, முடிந்தவைகளையாவது தவறாமல் பண்ண வேண்டும்.



# அம்மா

ரா. கணபதி

## 5. விசிறினள், அன்பை வீசினள்!

> அஞ்சு வயசினிலே அறியாப் பருவத்திலே
> பிஞ்சிலே கூடினோமா -- கிளியே
> பிரிய மனம் இல்லையே (நாட்டுப் பாடல்)

அஞ்சு வயசில் 'சரீர 'இன்பம்' எனப்படும் துன்பத்தைப் பற்றி ஏதுமே அறிவதற்கில்லை. ஆனால் உண்மையாக உள்ள ஒரே இன்பம் எதுவோ, அந்த பகவானைக் கலக்கும் இன்பத்தை அஞ்சு வயசிலேயே அநுபவித்தாள், முருகனுக்காக உருகிய வள்ளியம்மை. பர்வத ராஜகுமாரியாக வந்த பராசக்தியும் சரியாக ஐந்தாவது வயதில் சிவத்துக்காகத் தவம் இருக்கத் தொடங்கினாள். முருகன் — வள்ளி, பரமேசுவரன் — பார்வதி இவர்களின் சரீரங்களே தத்துவ மயமானவை: எனவேதான் முருகனும் வள்ளியும், ஈசனும் தேவியும் அணைந்த திருக்கோலத்தை, இணைந்த திருக்கோலத்தைச் சிற்பங்களில் கண்டும், துதிகளில் கேட்டும் மகிழ்கிறோம்.

மக்களோடு மக்களாக வாழ்ந்து, தேக இச்சை அடியோடு அற்றுப் போன பூரண பரிசுத்தத்தை மக்களுக்கு வாழ்ந்து காட்டுவதற்காக கதாதரரும் சாரதாமணியும் இவ்வுலகுக்கு மானுட சரீரத்துடனேயே வந்திருந்தார்கள். அஞ்சாவது வயசில் அக்கினி சாட்சியாக கதாயியைக் கரம் பிடித்தாள் சாரு.

ஆத்மாவோடு ஆத்மா கூடியது.

* * *

ஜயராம்பாடியில் புண்ணியபுகுர் என்ற ஏரிக் கரை அருகே சுந்தர நாராயணனுக்கு ஒரு கோயில்—அதாவது குடிசை — உண்டு. ஆமை வடிவில் உலகை எல்லாம் தாங்கும் தர்ம ஸ்வரூபமாக அங்கு சுந்தர நாராயணன் குடி(சை)கொண்டிருப்பான். பக்கத்திலேயிருந்த ஓர் அறைதான் அந்தக் கிராமத்தின் பள்ளிக்கூடம். அந்த அறையின் ஈசான்ய மூலையில் ஒரு கருப்புக் கல் பிரதிஷ்டையாகி இருந்தது. அதை 'ஷஷ்டி தேவி' என்பார்கள்.

ஷஷ்டிதேவி புத்திர சம்பத்தை அநுக்கிரகிக்கும் தெய்வம்.

புது மணத் தம்பதியரை அங்கு அழைத்துவந்து வணங்கச்செய்வார்கள்.

மொட மொடக்கும் புது வஸ்திரமும், சந்தனமும், புஷ்பமுமாக அங்கு கதாயியும் சாருவும் அழைத்து வரப்பட்டனர். புத்திர சம்பத்து என்றால் என்னவென்றே அந்த மணப் பெண்ணுக்குத் தெரியாது. மணமகனுக்கோவெனில் மகத்தான ஒரே ஒரு 'மாதா சம்பத்'தைத்தான் தெரியும்.

கதாயிக்கு இதெல்லாம் அம்பாளின் லீலாவிநோதம் என்று வெட்டவெளிச்சமாகத் தெரிந்தது. ஷஷ்டி தேவியை எல்லாப் புது மணமகளைப் போலவும் வணங்கினார். 'இந்த உலகில், வேறெந்த

அம்மாவும் பெற்றெடுக்காத அத்தனை லக்ஷம் குழந்தைகளைச் சாரு பெருமலே பெற்றெடுக்க வேண்டும்' என்று ஷஷ்டி தேவியிடம் புஷ்டியாக வேண்டிக் கொண்டாரோ, என்னவோ?

* * *

கலியாணமானதற்கு மறு நாள் மாலை சாருவையும் அழைத்துக் கொண்டு பின்னை வீட்டார் கிருகப் பிரவேசத்துக்காகக் காமார்புகூர் திரும்பினர். சாருவின் சித்தப்பா ஈசுவர சந்திர முகர்ஜி அவளைத் தூக்கிக்கொண்டே போனுர்!

காமார்புகூரில் ஈச்சம் பழங்கள் குலை குலையாகத் தொங்கின. சாரதாவுக்கு அவற்றைப் பறித்துத் தின்ன மாட்டோமா என்று ஆவல்!

மான் குட்டிபோல் மருண்டு வந்து நின்ற மாற்றுப் பெண் சாரதையை சந்திரமணி தேவி மிகுந்த அன்புடன் வரவேற்ருள். சுமங்கலிகள் ஆரத்தி சுற்றினர். ஒருசில உறவினர்களுக்குச் சிறிய விருந்து நடந்தது.

* * *

இரவு அடுக்களையிலிருந்து விம்மல் ஒலி கேட்டது.

கதாயி எழுந்து வந்து பார்த்தார்.

''அம்மா, அம்மா, அழாதே அம்மா'' என்று அன்னை சந்திரமணியை ஆசுவாசம் செய்தார்.

பல ஆண்டுகளுக்கு முன் பதிதேவர் மறைந்து போனதையும், சென்ற ஆண்டு ஜேஷ்ட புத்திரன் ராமகுமாரன் மாண்டு போனதையும் பெண்களுக்கே உரியபடிக் கலியாண சமயத்தில் நினைவுகூர்ந்து அம்மா அழுகிருள் என்றே எண்ணினுர் கதாதரர்.

''இதெல்லாம் அம்பாள் சங்கற்பம் அம்மா. இதற்கு அழக்கூடாது. நீ விவேகியாச்சே! எப்பவோ முடிஞ்சு போனதை நினைக்க ஏன் அம்மா இப்படி





மூக மூகன்னு அழறே?'' என்று வாஞ்சையுடன் சமாதானப்படுத்தினார்.

சந்திரா தேவி கரகரத்த குரலில் சொன்னாள் : ''பழைய கஷ்டத்துக்கெல்லாந்தான் மனசைப் பாறாங்கல்லாக்கிண்டுட்டேனே! இன்னிக்குக் கஷ்டத்துக்காகத்தான் இப்போ அழறேன். இந்தப் பச்சைக் குழந்தை, அஞ்சு வயசுப் பிஞ்சு, அது இங்கே வந்த ஒரு நிமிஷம் தான் தயங்கி நின்னுதே தவிர, அடுத்த நிமிஷமே எங்கிட்ட 'அம்மா'ன்னு ஆசையா வந்து ஒட்டிண்டுடுத்து. அந்தக் குழந்தைக்கு நம்பிக்கைத் துரோகம் பண்ண....'' — சந்திரமணியால் மேலே பேச முடியவில்லை.

தன் பக்கத்தில் ஒட்டிக் கொண்டிருக்கும் மாற்றுப் பெண்ணின் தூக்கம் கலையாமல் தட்டிக் கொடுக்கலானாள்.

அப்போதுதான் கதாயி தமது 'பாரியாள்' அங்கே உறங்குவதையே கவனித்தார்.

சிம்னி விளக்கொளியிலும்கூட அவள் அணிந்து கொண்டிருந்த கூடை நகைகளும் மினுக்கிட்டன.

அம்மா அழுதது எதற்காக என்று அவருக்குப் புரிந்துவிட்டது.

கதாதரருக்கும் பரிதாபமாக, அநுதாபமாகத்தான் இருந்தது.

மாற்றுப் பெண்ணுக்கு நகை நட்டுகள் செய்து போடச் சந்திரமணிக்கு வசதியில்லை. காமார்புகுரில் பெரிய தனவந்தரான லாஹாவின் வீட்டிலிருந்து நகைகளை இரவல் வாங்கி ஜயராம்பாடிக்கு அனுப்பியிருந்தாள். அந்த நகைகளைத் தான் சாரு ஆசை ஆசையாக அணிந்து கொண்டிருந்தது. நாளைக்கு நகையை எல்லாம் சொந்தக்காரர்களிடம் திருப்பி ஆக வேண்டும். அந்த நகை எல்லாம் தனக்கே தனக்கு என்று நம்பிக்கொண்டிருக்கும் குழந்தையை எப்படி வஞ்சிப்பது?

இந்தத் துக்கம்தான் பதியும், புத்திரனும் மாண்டுபோனதைவிடப் பெரிய துயரமாகச் சந்திராவை உலுக்கியது.

கதாயி ஏதுமே பேசவில்லை. சாக்ஷாத் பவதாரிணிக்கு அபிஷேகம் செய்யும் முன்பு எப்படி அவளது திருவாபரணங்களைக் கழற்றுவாரோ, அப்படியே தூங்குகிற சாரதாமணி அணிந்திருந்த நகைகளைக் கழற்றத் தொடங்கினார்.

தூக்கத்தில் துவளும் அந்த இளம் கழுத்தை ஒரு தந்தை போலத் தூக்கிச் சங்கிலிகளையும், அட்டிகையையும் கழற்றினார். ஒருக்களித்துப் படுத்திருந்த சாருவின் மேல் காதுக் கம்மலைக் கழற்றியபின், மறுபுறம் அந்த மதி முகத்தைத் திருப்பினார். அந்தப் பக்கத்தைத் தரையில் அழுந்த வைத்துப் படுத்திருந்ததால் கதுப்புக் கன்னத்தில் வைரத்தோடு ஆழப் புதைந்து செம்புத் தோடுபோல் புள்ளி புள்ளியாகச் சிவக்க வைத்திருந்தது. அந்தத் தோட்டையும் நிச்சலனமாகக் கழற்றினார். சந்தனக் கட்டை போன்ற கரங்களிலிருந்து கல் வளையல்களை உருவினார். குஞ்சு விரல்களில் மின்னிய மோதிரங்களை ஒவ்வொன்றாகக் கழற்றினார். அவை சற்றே பிடிப்பாக இருந்ததால் குழந்தை விழித்துக் கொண்டுவிடும்போல் சிணுங்கியது. தட்டிக் கொடுத்துக் கொண்டே 'திருவரங்ககத்தி' செய்தார்.

அத்தனை நகைகளையும் அம்மாவின் கையில் அள்ளிப் போட்டார் !

கிண்டாகக் கனத்த நகைகளின் பளுவில் சந்திரமணியின் கை தொய்ந்தது. இதயம் அதைவிடத் தொய்ந்தது.

**கா**லையில் அடுப்படியில் காரியமாக இருந்த சந்திராவிடம் சாரு 'ஓ'வென்று அழுதுகொண்டு வந்தது. திடீரென்று வானத்தில் நட்சத்திரங்களெல்லாம் மறைந்து, மழைப் போர்வை கொண்டாற்போலிருந்தது, அவளைப் பார்க்க.

''அம்மா, நான் இங்கே...இங்கே... (தன் திவ்விய அங்கங்களைத் தொட்டுக் காட்டி) அப்புறம் இங்கே... போட்டுண்டிருந்த நகையெல்லாம் எங்கேம்மா? திருடன் கொண்டு போய்ட்டானா?'' என்று கேட்டு விசித்து அழுதாள், அழத் தகாத அருமைச் சாரு.

சந்திராதேவி மாற்றுப் பெண்ணை அப்படியே வாரி மடியில் வைத்துக் கொண்டு தடவிக் கொடுத்தாள். ''கண்ணம்மா, அந்த நகையெல்லாம் விஷக் கல்லுலே பண்ணினதாம். அதைக் கொஞ்சநாழிதான் போட்டுக்கலாமாம். அப்புறம் உடம்பெல்லாம் சிரங்கு வந்திடுமாம். அதனாலேதான் எங்க சாருவுக்கு இந்தச் சனியெல்லாம் வேண்டாம்னு தூக்கிப் போட்டுட்டேன். கதாயி இருக்கான் பாரு, அவனுக்கு ஒங்கிட்டே ரொம்ப ஆசை. அப்புறம் ஒனக்கு அவன் எப்படிப்பட்ட நகையெல்லாம் பண்ணிப் போடப் போறான் தெரியுமா ? இந்த விஷ நகை போச்சேன்னு நீ அழவே கூடாது. என்ன, நீ சமர்த்துச் சாருதானே?'' என்றாள்.

''ஆமாம், நான் சமர்த்துச் சாருதான், அழவேமாட்டேன்'' என்று சொல்லிக்கொண்டே வெறிச்சிட்டுப் போன விரல்களைப் பார்த்துக் கொண்டு தேம்பியது குழந்தை.



சந்திரமணி மகா புண்ணியவதி. அவளுடைய வாக்குப் பொய்யாகவில்லை. பிற்காலத்தில் கதாதரர் சாரதைக்கு எப்பேர்ப்பட்ட விலை மதிப்பற்ற ஆபரணங்களை எல்லாம் பூட்டி அணி செய்தார்? அன்பு, அடக்கம், பக்தி, ஞானம், தவம், சீலம் இப்படிப்பட்ட அற்புத மணிகளையெல்லாம் சாரதாமணிக்கு அணிவித்தார் அல்லவா? அதுமட்டுமல்ல. பொன்னையும் மண்ணையும் ஒன்றாகவே கருதிய அந்த வைராக்கிய சீலர் தாயின் வார்த்தைகளை நினைவு வைத்திருந்து மெய்யாலுமே சாரதைக்குப் பொன்னுபரணங்களும் செய்து போட்டார்.

ஈச்சம் பழத்தைச் சாப்பிட்டுச் சாருவின் இச்சை பூர்த்தியாயிற்று. நகையை மறந்து சமாதானம் அடைந்தாள். ஆனால் அவளது சிற்றப்பா ஈசுவர முகர்ஜி சமாதானமடையவில்லை.

என்னுருண்டையாகக் குதித்தார் அவர். "ஏதோ நீங்களேதான் நகை போட்டிருக்கேள்னு நினைச்சுண்டிருந்தோம். ஏமாத்திப்புட்டேளே! கன்யா சுல்கமும் முந்நூறு ரூபாய்ப் பிச்சைக் காசுதான் தந்தேள். எங்க கொழந்தை அப்படி ஒண்ணும் உதவாக்கரை இல்லே. போதும், உங்க சம்பந்தம். இப்பவே எங்காத்துப் பெண்ணை அழைச்சுண்டு போறேன்" என்று ரகளை கட்டினார்.

சாரதாமணியை உப்பு மூட்டை தூக்கிக் கொண்டு கிளம்பிவிட்டார்.

"அடா ராமு, அடே கதாயி! சம்பந்திப் பிராமணர் கோவிச்சுண்டு போறாரேடா, போய்ச் சமாதானப்படுத்தி அழைச்சுண்டு வாங்கோடா!" என்று கதவிடுக்கிலிருந்து குரல் கொடுத்தாள் சந்திரா.

ராமேசுவரர் அசையவில்லை.

கதாயி இடித்த புளியாக அமர்ந்திருந்தார். "சங்கடப்படும்படியா ஒண்ணுமே நடக்கலேம்மா. கலியாணம்ங்கிறது தீர்ந்துபோன விஷயம்தானே? அதை இல்லேன்னு அவாளாலே மாத்தி விட முடியாதோன்னோ?" என்று நிம்மதியாக, நிதானமாகக் கேட்டார். விவாகரத்து என்பதாக ஒன்றை ஹிந்துக்கள் சொப்பனத்தில்கூட எண்ணிப் பாராத காலம் அது.

தம்பி செய்த காரியம் ராமசந்திர முகர்ஜிக்குப் பிடிக்கவில்லை. சாரதை பிறப்பதற்கு முன்பே சர்வாலங்கார பூஷிதையாக அவருக்குத் தரிசனம் தந்திருந்தாள். எனவே, இப்போது அவளுக்கு நகை போடுவதையோ, கழற்றுவதையோ அவரால் பெரிய விஷயமாக நினைக்கவே முடியவில்லை.

எனவே கதாதரர் சொன்னபடியே, இந்த விவகாரம் துளிக்கூட சங்கடத்துக்கு இடம் இல்லை என்பதுபோல் எளிதில் தீர்ந்துபோயிற்று.

**1860**ம் வருடம் டிஸம்பர் மாதத்தில் கதாதரர் ஜயராம்பாடிக்கு இரண்டாம் முறையாகச் சென்றார். சாரதைக்கு ஏழாவது பிறந்த தினம் வந்தது. அதற்கெனவே வங்கத்து வழக்கப்படி அவர் வேட்டகம் சென்றார்.

சாரு தன் அகத்துக்காரரைப் பார்த்து இப்போது சுமார் ஒன்றரை வருடமாகியிருந்தது. ஆனாலும் அவளுக்கே இனம் தெரியாத வகையில் அவரைப் பற்றி ஒரு புனித நினைவு அவளுள் கமழ்ந்து கொண்டே இருந்தது.

கதாயி வீட்டுக்குள் வந்தாரோ இல்லையோ, ஏதோ ஓர் ஆவேசம் சாரதையைப் பற்றிக் கொண்டது. யாரும் சொல்லாமலே அந்தக் குழந்தை ஒரு கும்பம் நீர் கொணர்ந்தாள். பதியின் பாதங்களைக் கழுவித் தலையில் புரோக்ஷித்துக் கொண்டாள்.

"ஹும்மா" என்று சொல்லிக் கொண்டே கதாயி விசுப்பலகையில் அமர்ந்து கொண்டவுடன், சாரு தானாகவே விசிறியைத் தூக்கிக்கொண்டு போய் அவருக்கு விசிறலானாள்.

ஊர்ப் பெண்டுகள் எல்லாரும் வந்து சூழ்ந்து கொண்டு கேலி பேசினார்கள். "முளைச்சு மூணு இலே விடலே. இந்தச் சாரு செய்யற 'முத்ஸட்டை'யைப் பாத்தேளோ? அகமுடையானுக்குச் சொக்குப் பொடின்னு போடறா!" என்றார்கள்.

தூய கதாயி இந்தத் தமாஷை ரசித்தார். "மூணு இலே விடாத கொழந்தையா அவ? கதாதர பட்டாச்சாரியாருடைய தர்மபத்தினியாக்கும்! டேய், ஹ்ருதே! உனக்கு மாமியடா அவள். விழுந்து நமஸ்காரம் பண்ணு" என்றார்.

கதாயியுடன் வந்திருந்த ஹ்ருதயராம் முகர்ஜி மேல் வேஷ்டியை இடுப்பில் கட்டிக் கொண்டு சாரதா 'மாமி'க்கு நமஸ்காரம் செய்ய வந்தார்.

இத்தனை நாழி வெட்கமறியாமலிருந்த குழந்தை, அந்த 'மாமா' தனக்கு நமஸ்காரம் பண்ண வந்தவுடன் லஜ்ஜையுடன் உள்ளே ஓடினாள்.

ஹ்ருதயர் விடாமல் அவளைத் தேடிச் சென்று தண்டனிட்டார்.



சாரு மீண்டும் வெளியில் வந்தாள். அவளையும் சுதாயியையும் மாற்றி மாற்றிப் பார்த்துக் கண் பனிக்க நின்றுள் பானு மாமி. பரமபக்தி வாய்ந்த பானு ஜயராம்பாடிக்கே 'மாமி'!

''ஷ்ருதயராம், நீங்கள் பாக்கிய சாலி! உறவுமுறையை வைத்துக் கொண்டு சாரதையை நமஸ்கரித்துவிட்டீர்கள். நாங்கள் அப்படி நமஸ்காரம் பண்ண முடியலே'' என்று கூறிவிட்டு, சாருவைப் பார்த்துப் பழைய காலத்துப் பாட்டு ஒன்றைப் பாடினுள்:

நித்திக்கும் அழகும் பெண்ணே—உனக்கும்
பித்தன்தான் மாலையிட்டானே?

பிக்ஷாடனனை மணந்த பார்வதியைப் பார்த்து அவளது அன்னை மேனை பாடிய பாட்டு அது. கண்ணீர் வழிய அர்த்தபுஷ்டியுடன் பாடினுள் பானு.

ஜயராம்பாடி அப்போது அந்த அர்த்தத்தைப் புரிந்துகொள்ளவில்லை!

சுதாயி திரும்புகையில் சாரதையையும் சம்பிரதாயப்படி காமார்புகுருக்குக் கூட்டி வந்தார்.

''சாரதே! காமார்புகுரில் யார் இருக்கா, அங்கே ஏன் போறேம்னு தெரியுமா?'' என்று அவளை வினவினுர்.

''ஓ, தெரியுமே'' என்று கண்களை அகல விரித்தாள் குழந்தை. ''அங்கே இன்னொரு அம்மா இருக்கா, நம்பளுக்குக் கலியாணமோல்லியோ? அதனுலே தான் ஒங்க ஊருக்குப் போறேம்'' என்று நீட்டி முழக்கினுள்.

''ஆமாம், 'நம்பளுக்கு' எப்பக் கலியாணம்?'' என்று கண்ணைச் சிமிட்டினுர் சுதாயி.

''இப்பத்தான் கலியாணம்; இன்னிக்குத்தான் கலியாணம்.''

''அசடே! 'நம்பளுக்கு'க் கலியாணமாகி ஒன்னரை வருஷமாயிடுத்து. இப்போ ஒனக்கு வயசு ஏழு. அஞ்சு வயசிலேயே ஒனக்குக் கலியாணமாயிடுத்து. இப்பத்தான் கலியாணம்னு யார் கிட்டேயும் உளறி வைக்காதே.''

''உளறமாட்டேன். நீங்க சொன்ன மாதிரியே சரியாச் சொல்லுவேன்'' என்று தலையை ஆட்டினுள் தேவி.

''என்ன சொல்லுவே?'' — பரீட்சை வைத்தார் சுதாயி.

''எனக்கு இப்போ வயசு ஏழு; அஞ்சு வயசிலேயே கலியாணமாயிடுத்துன்னு சொல்லுவேன்'' — பணிச்சென்று பதில் சொன்னுள் சாரு.

பெண்டாட்டியின் புத்திசாலித்தனத்தில் புருஷனுக்குக் கொள்ளைப்பெருமை.

காமார்புகுரிலிருந்து சிறிது காலத்திலேயே கதாதரர் தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்பி விட்டார்; தக்ஷிணேமே மனைவியை மறந்தும் விட்டார்.

சாரதை ஜயராம்பாடிக்குத் திரும்பினுள்.

தன்னையொத்த குழந்தைகள் பள்ளிக்குச் செல்வதைப் பார்த்து விட்டுத் தானும் கிளம்பினுள்.

பள்ளியில் குழந்தைகள் கக்கத்தில் இடுக்கிய இலையும் (இலைதான் அவர்களுக்கு 'சிலேட்'), துணியில் முடிந்த டிஃபனுமாகப் பெருமையுடன் குழுமியிருந்தார்கள்.

அந்தக் குழந்தைகளுக்கு டிஃபன் என்ன தெரியுமா? அவல் பொரிதான். 'முடி' என்று வங்கத்தில் சொல்வார்கள். அந்த 'முடி'யைப் போடும் டிஃபன் பாத்திரம் என்ன தெரியுமா? அவர்கள் உடுத்தியிருக்கும் துண்டில் — அல்லது பாவாடையிலேயே — ஒரு மூலைதான். துணியின் மூலையில் 'முடி'யை முடிந்திருப்பார்கள்.

இந்தத் தேசத்தில் இரண்டு தலைமுறைக்கு முன்பு வரையில் இப்படிப் பட்ட எளிமை இருந்தது; மக்களுக்குத் திருப்தியும் நிம்மதியும் இருந்தன.

சாரு சில நாட்கள் இப்படி 'முடி'யை முடிந்தபடி பள்ளிக்குப் போய் வந்தாள்.

பிறகு 'கலியாணமான பெண், இப்படியெல்லாம் திரியக்கூடாது' என்று அம்மா சொன்னதை ஒப்புக் கொண்டு பள்ளியிலிருந்து நின்று விட்டாள்.

**1864**ம் ஆண்டு. சாரதைக்கு வயது பதினென்று.

ஊரிலே பெரிய பஞ்சம் வந்தது. 'வங்கத்து வற்கடம்' என்று அதைப் பற்றிச் சொல்வார்கள்.

பஞ்சத்தில் மக்கள் பரிதவிப்பதை ராமசந்திரரால் காணச் சகிக்கவில்லை. தாம் அறுவடை செய்திருந்த நெல்லை அப்படியே ஏழைகளின் அன்னதானத்துக்குச் செலவிட்டார். அரிசி புழுக்குவதும், தானியங்களோடு சேர்த்து அதைக் கிச்சடியாகச் சமைப்பதுமே சியாமாவுக்கும் சாரதைக்கும் வேலை ஆயிற்று.

''சாருவுக்கு மட்டும் சுத்த அன்னமாக வடித்துப் போடு; பாக்கி நம் எல்லோருக்கும் புழுங்கரிசிக் கிச்சடி தான்'' என்று சியாமையிடம் ராமசந்திரர் உத்தரவு போட்டுவிட்டார்.

எத்தனையோ மிராசுதார்களுக்கும், ஜமீன்தார்களுக்கும் இல்லாத பெரிய



மனசு ஏழை ராமசந்திரருக்கு இருந்தது. வயிறு காய்ந்த ஏழைப் பட்டாளம் 'அன்னதாதா' என்று வாழ்த்திக் கொண்டு அவரது குடிலை மொய்த்தது.

சாருவின் சந்திர முகத்தைப் பார்த்தாலே அவர்களுக்குப் பாதி பசி தீரும். அவள் பரிந்து பரிந்து பரிமாறினால் அன்னபூர்ணேசுவரியே உணவிட்டது போல், உதரம் மட்டுமின்றி இதயமும் நிரம்பி வெளியேறுவார்கள்.

'டோம்' என்று சொல்லப்படும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த பெண்ணொருத்தி பசிக் கொடுமையில் வெறிபோல் ராமசந்திரர் வீட்டுக்குள் பிரவேசித்தாள். செக்கச் சிவந்து பிதுங்கியிருந்த அவளது கண்களில் மாட்டுத் தொட்டியில் நிரம்பியிருந்த தவிட்டுக் கழிவு நீர்தான் நேரே தெரிந்தது. ஓடினாள் அவ்விடம். முரட்டுத் தவிட்டைத் தோண்டி எடுத்து அவசரம் அவசரமாக விழுங்கலானாள்.

"கிச்சடியிருக்குடியம்மா! தவிட்டைத் தின்னாதே!" என்று சாரதை கூவியதுகூட முதலில் அவள் காதில் விழவில்லை. நாலு பிடி தவிடு உள்ளே போனபின்தான் அவளது காதடைப்புப் போய்க் குரலே கேட்டது.

அந்த ஹரிஜனப் பெண்ணுக்குச் சம்பிரமமாக இலை போட்டாள் சாரதை. கொதிக்கக் கொதிக்கக் கிச்சடியைக் கொண்டு வந்து பரிமாறினாள். உண்பதற்கு அவள் எப்படிப் பறக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டு விசிறிகொண்டு வந்து, ஆவி பறக்கும் கிச்சடியை விசிறினாள். ஒரு விசிறி போதாது என்று இரண்டு கைகளில் இரண்டு விசிறிகளை வைத்துக்கொண்டு, தடுமாற்றமில்லாமல் இரண்டு கைகளாலும் விசிறினாள் இனிமையே உருவான சாரதாம்பிகை.

இப்படி எத்தனை ஏழைகளுக்கு இரட்டை விசிறி மரியாதையைச் செலுத்தினாள்? ராஜாக்களுக்கு இரட்டைச் சாமரம் இரட்டுவது மரியாதை எனில் தீனர்களுக்கு இது அதைவிடப் பெரிய மரியாதை அன்றோ?

அன்று யாரும் சொல்லாமலே பதிதேவருக்கு விசிறினாள். இன்று பட்டினிப் பட்டாளத்தின் உணவை இரு கைகளாலும் விசிறினாள். அது பாதிவிரத்தியம்; இது அம்மா தத்துவம். இந்த இரண்டும் பின்னிப் பிணைந்ததே சாரதையின் சரிதை.

**ப**தின்மூன்றும் பருவத்தில் சாரதாமணி மீண்டும் காமார்புகுருக்கு வந்தாள். அப்போது கதாதரர் தக்ஷிணேசுவரத்தில் இருந்தார். சந்திரமணி தேவியும் பிள்ளையுடனேயே தக்ஷிணேசுவரத்தில்தான் இருந்தாள். காமார்புகுரில் சாரதாவின் மூத்த மைத்துனர் ராமேசுவரரும், அவரது மனைவி, குழந்தைகளும்தான் இருந்தனர்.

மதனிக்குச் சாருவைப்போல் கருசுருப்புக் கிடையாது. சாரதைக்கோ காலையில் எழுந்தவுடனேயே குளித்தாக வேண்டும். பெண்களுக்கு என்று பிரத்தியேகமாக இருந்த புறக்கடைக் கதவைத் திறந்து வைத்துக் கொண்டு அப்படியே யோசனையில் நின்றாள் சாரதை. 'கசகசவென்று இன்னும் எத்தனை நாழி குளிக்காமலிருப்பது? மன்னி எப்போது வருவாரோ? அது மட்டும் காத்திருப்பதா? தனியாகத் தடாகத்துக்குப் போகலாம் என்றாலோ, மணமானவள், பதின்மூன்று வயசானபின் அப்படிச் செல்வது யுக்தமில்லை. வெட்டியாகக் காலவேளையில் குளிக்காமல் வேலையோ, பூஜையோ ஏதுமே செய்ய முடியவில்லையே! சிம்மவாஹினி, இதென்ன சங்கடமடி தாயே' என்று குறைப்பட்டுக்கொண்டு நின்றாள்.

திடீரென்று எங்கிருந்தோ எட்டுப் பெண்கள் அவள் முன் வந்து நின்றார்கள். அதில் நாலு பேர் பிரிந்து அவளுக்கு முன்பாக அணிவகுத்து நின்றார்கள்.

ஏதோ ஓர் உள்ளுணர்ச்சி சாரதையைப் பிடித்துத் தள்ள அவள் ஐந்தாமவளாகப் போய் நடுவில் நின்றாள்.

எட்டுப் பேரில் மீதமிருந்த நாலு பெண்கள் அவளுக்குப் பின்னே வரிசையாக நின்றனர்.

நவதுர்கைகளைப்போல் அந்த ஒன்பது பேருமாக ஹால்தார்புகுர் ஏரிக்குச் சென்றனர். நீராடினர். குடத்தில் நீரெடுத்துக் கொண்டு திரும்பினர்.

வீட்டுப் புறக்கடை வந்ததுதான் தாமதம், அந்த எட்டுப் பேரும் எப்படித் திடீரென வந்தனரோ, அவ்வாறே திடீரென மறைந்தும் விட்டனர்.

அன்று மட்டுமல்ல. சாரதை அம்முறை காமார்புகுரிலிருந்த அத்தனை தினங்களும் இப்படியே நடந்தது.

அவர்கள் யார் என்று சாருவுக்குத் தெரியவில்லை. ஆனால் ஏனோ அவர்களிடம் அவள் அது பற்றிக் கேட்கவுமில்லை. அவர்களும் துணை வந்தது தவிர, ஒரு வார்த்தை பேசவில்லை.

'ஜகன்மாதாவுக்கு எட்டுப் பாங்கியர் பணிவிடை புரிவார்கள்' என்று இந்நிகழ்ச்சியைக் கூறும் ஸ்வாமி கம்பீராநந்தர் குறிப்பிடுகிறார். (தொடரும்)



# டார்ஜீலிங்

தி. சா. ராஜு

சென்னைக்கு உதகமண்டலம், தில்லிக்குச் சிம்லா, கல்கத்தாவுக்கு டார்ஜீலிங்.

'டோர்ஜே' என்று திபெத்திய மொழியில் இந்திரனின் செங்கோலுக்குப் பெயர். 'லிங்' என்றால் கிராமம். தேவர் தலைவனின் செங்கோல் இந்த இடத்தில் ஓர் இடி உருவத்தில் விழுந்ததாக ஒரு கர்ண பரம்பரைக் கதை வழங்குகிறது. இன்றும் அந்த இடத்தை ஹிந்துக்களும் புத்தர்களும் வழிபடுகிறார்கள்.

கடல் மட்டத்திலிருந்து எண்ணாயிரம் அடி உயரமுள்ள இந்த இடத்தை அணுக அறுபது மைல் நீளமுள்ள நெடுஞ்சாலை உள்ளது. ரயில் பாதையும் நெடுஞ்சாலையும், சமாந்திரமாகவும் ஒன்றையொன்று பின்னிக் கொண்டும் கிடக்கின்றன. நீல நிற ரயில் பெட்டிகளிலோ





அல்லது சாலை வழியாகவோ செல்லும்போது எதிர்ப்படும் காட்சிகள் எழில் மிக்கவை.

அவ்வப்போது யானைக் கூட்டங்கள் தென்படுகின்றன. சிறுத்தையோ மற்ற வனவிலங்குகளோ எப்போதாவது தான் காண முடியும். பற்பல சலசல அருவிகள். அந்த நீரை மூங்கில் குழாய் மூலம் பல குடியிருப்புகளுக்குக் கொண்டு போகின்றனர் மலைவாசிகள்.

டார்ஜீலிங் டீ உலகப் பிரசித்தி. தேயிலைத் தோட்டங்களில் பணி புரியும் தொழிலாளிகள் பெருமளவு ஆதிவாசிகள்தாம். பல மலை இடுக்குகளில் தேனடைகள் தொங்குகின்றன. ஒவ்வொன்றும் யானைக் காதளவு. சில ஐந்தடி விட்டம்கூட இருக்கிறது. பெரிய அடையிலிருந்து அறுபது பவுண்டு வரையில் தேன் எடுத்ததாக மலைவாசி நண்பர் கூறினார். ஆனால் அந்தத் தேனீக்களோ வன்மம் மிக்கவை. யாதவயானைகளை விடக் குரூரமானவை. மைல்கணக்கில் மக்களைத் துரத்திக் கொண்டு வந்து கொட்டுமாம். பாடிங்டன் என்ற வெள்ளைக்கார எஞ்சினியர் ஒரு தரம் அவைகளிடம் சிக்கிக் கொண்டு தப்பி ஓடி நீரில் மூழ்கினாராம். அங்கேயும் அவரைச் சூழ்ந்து கொண்டனவாம் தேனீக்கள். பாவம், அவர் தேனுக்கு ஆசைப்பட்டு ஜல சமாதி அடைந்தார்.

நமது அண்டை நாடான நேபாளம் வலிமை கொண்டிருந்தபோது பல சமயங்களில் இந்தியாவைப் பதம் பார்த்திருக்கிறது. அவர்களுடைய ஆக்கிரமிப்புப் படைகள் மேற்கு இமாலயப் பகுதியில் காங்டா வரையில் சென்று மன்னன் சன்சார் சந்தை உலுக்கியிருக்கின்றன. நேபாளிகள் டார்ஜீலிங்கின் ஜனத்தொகையில் எழுபது விழுக்காடு. இவர்கள் தீவிரமான சமயப் பற்று உடையவர்கள். மலைவாசிகளான காரணத்தினால் உடல் உழைப்புக்கு அஞ்சாதவர்கள். துயரங்களை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளும் இயல்பு உடையவர்கள். உண்மையானவர்கள். நல்ல படை வீரர்கள் — வேறு எந்தத் தொழிலுக்கும் அவர்களுடைய தாய்நாடு வாய்ப்புத் தராததால்.

எழில்மிக்க டார்ஜீலிங் மேற்கு வங்கத்தின் ஒரு மாவட்டம். அதன்



- ரயில் பாதை.
- கோர்க்காலி தாயும் - சேயும்.
- கூம் - புத்த மடாலயம்.

எல்லை சீனா, நேபாளம், திபெத், சிக்கிம் ஆகிய நாடுகளைத் தொடுகிறது. இவ்வளவு காலம் இந்த மாவட்ட மக்கள் வங்காளிகளுடன் வாழ்ந்தும் அவர்களுடன்

சுமுகமான உறவு ஏற்படவில்லை. ஒவ்வொரு சமயங்களில் மோதல்களும் நிகழ்கின்றன. அங்குள்ள ஆலயங்களிலே அவர்கள் ஹிந்து மந்திர், வங்காளி மந்திர் என்று பாகுபடுத்திப் பேசுகிறார்கள். நேபாளம் நமது அண்டை நாடு. சுதந்திர தேசம். அதற்கு நம் நாடு எவ்வளவோ உதவி செய்துள்ளது; செய்தும் வருகிறது. உலகில் உள்ள ஒரே இந்து தேசம் நேபாளம். என்றாலும் அவர்களுடன் நமது உறவு சுமுகமாக இல்லை. அதன் பிரதிபலிப்பை டார்ஜீலிங்கில் காண முடிந்தது.

எல்லைவாசிகளுடைய நட்பை வலிந்து பெற்றுக் கொண்டு அவர்களை நம் தாயகத்தில் பற்றுள்ளவர்களாக ஆக்க வேண்டும். இது அரசாங்கத்தின் மிக முக்கியமான செயல் என்று இந்த நாட்டின் இரும்பு மனிதர் என்றோ கூறிவிட்டார். அதன் முழுப் பொருளையும் நாம் இன்னும் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

நாற்சந்தியிலிருந்து ஒரு மைல் தொலைவில் ஜவார் பர்வதத்தில் மலை ஏறுபவர்களின் பயிற்சி நிலையம் அமைந்துள்ளது. '' லாஜோ: லாறு மாருதக '' — 'சிகரத்துக்குச் சிகரம் நீ முன்னேறுவாயாக' என்ற ஆசிச் சொல் பள்ளியின் முகப்பில் மின்னுகிறது. அதன் முதல்வர் ஷெர்ப்பா தென்சிங் நோர்கே. அவர் ஒரு சாதாரணக் கூலித் தலைவராக இருந்தவர். எட்மண்ட் ஹில்லாரியுடன் இவரும் முதன் முதல் எவரெஸ்ட் சிகரத்தைத் தொட்டவர். பிறப்பில் இவர் நேபாளி. நேருஜி இவரை இந்தப் பயிற்சிப் பள்ளிக்குத் தலைவராக்கி இவருடைய தொண்டைப் பயன்படுத்திக் கொண்டார். பயிற்சி நிலையத்தில் மலை ஏறுபவர்கள் அணிந்துகொள்ள வேண்டிய உடைகள், துணைக் கருவிகள் உள்ளன. செயற்கரும் சாதனைகள் புரிந்த இவர்கள் மலை ஏறும் போது அணிந்த உடை, பயன்படுத்திய பொருள்கள் அனைத்தையும் காட்சிக்கு வைத்திருக்கின்றனர். இமயப் பனிச் சரிவில் மனிதன் அடைந்த ஏமாற்றம், தோல்வி, வெற்றி ஆகியவைகளைச் சித்திரிக்கும் புகைப்படங்கள் உள்ளன. சாதாரண மனிதனால் எட்ட முடியாத உயரத்தில் மின்னிய இயற்கையின் எழிற் செல்வங்களைக் காட்சிப் பொருளாக வைத்திருக்கிறார்கள்.



அண்மையிலேயே வன விலங்குச் சாலை உள்ளது. இமயப் பிரதேசத்தில் மட்டுமே வாழக்கூடிய சைபீரியப் புலிகள், இமயக் கரடிகள், கலைமான், யாக் என்ற காட்டு ஆடு, லாமா ஆகியவை மற்ற இடங்களில் காணக் கிடைக்காதவை. புறாவின் உருவமும் மயிலின் தோகையும் உடைய புள்ளினங்கள், சரிகைப் போர்வை அணிந்திருக்கும் கோழி உருவ நாரைகள் ஆகிய இவை பனிப் பிரதேசத்தில் மட்டுமே வாழக் கூடும்.

- நீர் - நாம் மந்திர்.
- கஞ்சன் ஜீங்கா (டைகர் குன்றிலிருந்து.)
- தோட்ட கை மணக்கும் தேயிலே.





குருஷேவ் ருஷியப் பிரதமராக இருந்தபோது இந்தச் சாலைக்கு இரு புலிக் குட்டிகளைப் பரிசளித்தார். அவை தற்போது மூன்று குருளைகளைத் தந்திருக்கின்றன. குற்றமறியாத அந்தக் குழந்தைப் புலிகள் பார்வையாளர்களுடன் விளையாடி மகிழ்கின்றன.

திபேத்தின் அரசர் தவத்திரு தலாய் லாமா அவர்கள் தம் நாட்டைவிட்டு இங்கு வந்து சரண் புகுந்திருப்பதை அறிவோம். அவரைத் தொடர்ந்து ஆயிரக்கணக்கான மக்களும் வந்தனர். இவர்களுக்கு மறு வாழ்வளிப்பது பெரிய பிரச்னையாக இருந்தது. ஒரு சிலரை இங்கு குடி அமைத்து அவர்களால் இயன்ற தொழிலைப் புரியும்படி வேண்டிற்று அரசாங்கம். அவர்கள் இங்கு கம்பளி ஆடை, ஜமுக்காளம், மரச் சாமான், தோல் பை ஆகியவைகளைத் தயாரிக்கிறார்கள். தொழில் புரியும் வேளையில் சிரமம் தெரியாமல் இருக்கக் கூடவே பாடவும்

செய்கிறார்கள். இங்கு சாமான்கள் வாங்கினால் அகதிகளுக்கு உதவிய புண்ணியமும் சேரும்.

கடைத்தெருவில் கசகசவென்று கூட்டம். அதிகம் விற்கப்படுவது பாக்கு, புகையிலை. இரண்டுமே சமவெளிப் பயிர் வகைகள். நீளமான சோப்புத் துண்டைப் போன்ற வில்லைகளைக் கரும்புத் துண்டங்களைப் போலக் குவித்து வைத்திருக்கிறார்கள். இவை பாலாடைக் கட்டிகள். சூர்ப்பி என்று பெயர். நெடுந் தொலைவு செல்லும் பயணிகளும், மலை ஏறுபவர்களும் இதை வாயில் அடக்கிக் கொள்கிறார்கள்.

டார்ஜீலிங்கின் சுற்றுப்புறத்தில் பசுவளம் மிகுதி. பால் ஏற்றுமதி ஆகவும் அதிக வாய்ப்பில்லை. ஆகவே, வெண்ணெய் தயாரிக்கப்படுகிறது. பசுவின் வெண்ணெய் மற்ற இடங்களில் எளிதில் கிடைக்காத ஒன்று. மலிவாகக் கிடைக்கும் மற்றொரு பொருள் இஞ்சி. மலைச் சரிவுகளில் இவை தாமாக விளைவதனால் வெட்டி எடுக்கும் செலவு மட்டும்தான். ஐம்பது பைசாவுக்குப் பெரும் கிழங்குகள் ஒரு கிலோ கிடைக்கின்றது. டார்ஜீலிங் ஆரஞ்சுகளும் ருசிக்குப் பெயர் போனவை. ஆனால் இவற்றை நெடுநாட்கள் கெடாமல் பாதுகாக்க இயலவில்லை. கடைத் தெருவில் திபெத்திய நேபாளிய கைவினைப் பொருள்கள் கவர்ச்சி மிக்கவை. இரத்தின வியாபாரம் இன்னொரு சிறப்புமிக்க தொழில். வைடூர்யம், கோமேதகம், மரகதம் ஆகிய பல அருமணிகள் விற்பனைக்குக் கிடைக்கின்றன. விலைதான் அருகே நெருங்க முடியவில்லை.

இந்தப் பிரதேசத்தில் மழை மிகுதி. மலையாளிகளைப் போலவே எல்லாரும் குடைகளைச் சுமந்து செல்கிறார்கள். குடை ஒக்கிடும் கடைகளும் ஏராளம். கோர்க்காலிய மங்கையர் பல நிறக் குடைகளை ஏந்திச் செல்வது ஓர் அழகிய காட்சி. உயர்தட்டுப் பெண்மணிகள் தங்களின் உடைக்கேற்ற நிறமுடைய குடை ஏந்துகிறார்கள். அது இந்தப் பிரதேச நாகரிகத்தின் சின்னமாகவும் கருதப்படுகிறது.

இங்கு வசிக்கும் மக்களின் தாய்மொழி கோர்க்காலி. நாகரி எழுத்தையே உபயோகிக்கிறார்கள். நாட்டுப் பாடல்கள் இவர்களது மொழியின் சிறப்பு அம்சம். நேபாளத்தின் சிறந்த கவி ஸ்ரீ பானுபக்த ஆசார்யா. இவர் கோர்க்காலி மொழியில் பல கவிதைகள் இயற்றியிருப்பதோடு இராம காதையையும் மொழிபெயர்த்துள்ளார். கோர்க்காலிகளின் வீடுகளிலும் கடைகளிலும் இவரது திருவுருவம் காண்பதற்கு மகிழ்ச்சி தருகிறது. குழந்தைகள் பூங்காவுக்கு அருகிலும் இவரது திருவுருவத்தை வைத்திருக்கிறார்கள்.

நகரத்துக்கு ஏழு மைல் தொலைவில் உள்ளது டைகர் ஹில் என்ற குன்று. டார்ஜீலிங்கைவிட அதிக உயரத்தில் உள்ளது இது. இங்கிருந்து பார்த்தால் எவரெஸ்ட் சிகரம் கண்ணுக்குப் புலப்படுகிறது. கஞ்சன் ஜிங்கா சிகரத்தின் மேல் சூரிய ஒளி படும் அற்புத காட்சியைக் காணலாம். இங்கிருந்து சூரிய உதயத்தையும் மறைவையும் காண்பதற்கென்றே பல யாத்திரிகர்கள் வருகிறார்கள்.

நகரத்துக்குக் குடி நீர் வழங்குவது சஞ்சல் என்ற ஏரி. இதன் கரை உல்லாசப் பயணிகளுக்கு ஏற்ற வகையில் அமைந்திருக்கிறது. வானளாவிய பைன் மரங்கள், அதைத் தழுவும் பொன்னுருவிகள், சிரிக்கும் மலர்கள், பசும்புல் தரை ஆகியவை மனம் கவரும் காட்சிகள். காற்றிலேயே இனிய மணம் கமழ்கிறது.

யாத்திரிகர்கள் வந்து திரும்பியவண்ணம் இருக்கிறார்கள். நகரம் கலகலப்பாகவும், வண்ண மிக்கதாகவும் உள்ளது. என்றாலும், ஊடே ஓர் அமைதியின்மை புலப்படுகிறது. அதற்கு ஏழ்மைதான் காரணம். கோர்க்கா லீக்கும் மார்க்ஸிய கம்யூனிஸ்டுகளும் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருக்கிறார்கள். சுற்றுப்புற மலைவளத்தின் உதவியைக் கொண்டு இங்கு வேலை வாய்ப்புக்கள் அதிகரிக்க முடியும். அதற்கான முயற்சிகளை எவ்வளவு விரைவில் செய்கிறோமோ, அவ்வளவு நல்லது.

## விநாயகர், முருகன், ஐயப்பன் திருப்பணி

பம்பாய் மாதுங்காவில் கடந்த இருபதாண்டுகளுக்கு மேலாகச் சமயத் துறையில் நற்பணி புரிந்து வருவது ஸ்ரீ சுப்பிரமணிய சமாஜம். சமாஜத்தினர் செம்பூர் பெஸ்டம் ஸாகரில் மனைக்கட்டு வாங்கி, இங்கு விநாயகர், முருகன், ஐயப்பன் ஆகியோரது சந்நிதிகள் கொண்ட ஓர் ஆலயத்தைத் தமிழகக் கோவில் பாணியிலேயே எழுப்ப இருக்கிறார்கள். கலியாண மண்டபம், நூல் நிலையம் ஆகியவை ஆலயத்தையொட்டி அமைக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். இப்பணி பூர்த்தியாக ஐந்து லட்சம் ரூபாய் தேவைப்படுகிறது. ''ஆஸ்திகர்கள் இத்தெய்விகத் திருப்பணிக்குத் தாராளமாக உதவி செய்தும், ஒத்துழைத்தும் பூர்த்தி செய்வித்து, ஸ்ரீ சுப்பிரமணிய ஸ்வாமியின் அநுக்கிரகத்தினால் எல்லா மங்களங்களையும் அடைவார்களாக'' என்று ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஸ்ரீமுகம் அளித்திருக்கிறார்கள். அதற்கதிகமாக நாம் ஏதும் சொல்லத் தேவையில்லை. பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: **ஸ்ரீ சுப்பிரமணிய சமாஜ், 1, யசோதா பவன், சந்தாவர்க்கர் ரோடு, மாதுங்கா, பம்பாய் 19.**

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் எழுபது

## கோட்டைக் காவல்

கோட்டைக்குள் பிரவேசித்த யானையையும் பல்லக்கையும் காலாந்தக கண்டர் சிறிது நேரம் மிகக் கவனமாக உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''அதிசயமாயிருக்கிறதே!'' என்றார்.

''என்ன அதிசயம்? எது அதிசயம்?'' என்று அநிருத்தர் வினவினார்.

''இளவரசர் மதுராந்தகர் இவ்வளவு ஆர்ப்பாட்டத்துடன் கோட்டைக்குள்ளே போவதுதான்! இளவரசர் மிக்க கூச்சம் உள்ளவராயிற்றே? பல்லக்கின் திரையை விட்டுக் கொண்டு அல்லவா பிரயாணம் செய்வார்?''

''என்றைக்காவது ஒரு நாள் கூச்சம் தெளிந்துதானே ஆக வேண்டும்? சீக்கிரத்தில் முடிசூட்டிக் கொள்ள வேண்டியவராயிற்றே?''

''மதுராந்தகருக்கு முடி சூட்டுவது என்று முடிவு செய்தாகி விட்டதா? யார் முடிவு செய்தார்கள்?''

''ஏன்? சக்கரவர்த்திதான்! நாம் எல்லாருமாகப் போய்ச் சக்கரவர்த்தியிடம் நம் சம்மதத்தைத் தெரிவித்ததும்...''

''சக்கரவர்த்தி முடிவு செய்து, நாம் சம்மதம் கொடுத்து என்ன பயன்? கொடும்பாளூர்ப் படைகள் அல்லவா சம்மதம் கொடுக்க வேண்டும்? அவர்கள் காவல் புரியும் கோட்டைக்குள் இளவரசர் மதுராந்தகர் இவ்வளவு குதூகலமாக யானை மேல் ஏறிப் போவது அதிசயந்தான்!'' என்றார் காலாந்தக கண்டர்.

யானை சென்ற திசையை நோக்கிச் சில அடிகள் எடுத்து வைத்துவிட்டு மறுபடியும் திரும்பி வந்தார்.

பின்னர், பெரிய பழுவேட்டரையரைப் பார்த்து, ''அண்ணா! நீங்கள் எல்லாரும் கோட்டைக்குள் செல்வதற்கு நான் குறுக்கே நிற்கவில்லை. ஆனால் நான் மட்டும் வரமுடியாது. நேற்று வரை என் கட்டுக்காவலுக்குள் இருந்த கோட்டையில் இன்று நான் பிறருடைய அதிகாரத்துக்கு உட்பட்டுப் பிரவேசிக்க முடியாது. என் மனம் இடங்கொடுக்கவில்லை. நீங்கள் போய்ச் சக்கரவர்த்தியைத் தரிசித்து அவருடைய விருப்பம் என்னவென்று தெரிந்து கொள்ளுங்கள். நான் நம் சைன்யத்துடன் வெளியிலே தான் இருப்பேன்.

மேலும், வந்தியத்தேவனைத் தேடிக் கொண்டு கந்தமாறன் போயிருக்கிறான். அவன் என்ன செய்தி கொண்டு வருகிறான் என்று அறிய நான் ஆவலாயிருக்கிறேன். வந்தியத்தேவன் எப்படிப் பாதாளச் சிறையிலிருந்து தப்பினான், யாருடைய உதவியினாலே வெளியேறினான் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.



என்னை மன்னித்து விட்டு, நீங்கள் எல்லாரும் கோட்டைக்குள் போங்கள்!'' என்றார்.

கொடும்பாளூர் வேளார் ஏதோ சொல்ல வாயெடுத்தார். அதற்குள் பெரிய பழுவேட்டரையர் குறுக்கிட்டு, ''சேநாபதி! இந்த மூடனுடைய மூளை கலங்கிப் போயிருக்கிறது. அவன் எக்கேடாவது கெட்டுப் போகட்டும்! நாம் போகலாம், வாருங்கள்!'' என்றார்.

ஆனால் மறுநாள் சக்கரவர்த்தியிடம் இந்த விவரங்கள் எல்லாம் அறிவிக்கப்பட்டபோது அவர் பெரிய பழுவேட்டரையரின் கருத்தை ஒப்புக் கொள்ளவில்லை. காலாந்தக கண்டர் வந்தே ஆக வேண்டும் என்று வற்புறுத்தினார்.

''என் அன்பார்ந்த தளபதிகளே! நீங்கள் எல்லாரும் என் நம்பிக்கைக்கு உகந்தவர்கள். ஆனால் உங்கள் எல்லாரிலும் நான் அதிகமாக நம்பிக்கை வைத்திருந்தது கோட்டைக் காவலர் காலாந்தக கண்டரிடத்திலேதான். அவர் ஏன் வரவில்லை? அவர் வராத வரையில் உங்களையெல்லாம் நான் அழைத்த காரியம் முடிவாகாது!'' என்றார்.

பெரிய பழுவேட்டரையர், ''சக்கரவர்த்தி! மன்னிக்க வேண்டும்! நான் ஒப்புக் கொள்கிற எந்த முடிவையும் என் சகோதரனும் ஒப்புக் கொள்வான்! அவன் நேரில் வந்துதான் ஆகவேண்டுமென்பதில்லை!'' என்றார்.

''தனாதிகாரி! இராமனுக்கு லக்ஷ்மணன் வாய்த்தது போல் தங்களுக்குக் காலாந்தக கண்டர் வாய்த்துள்ளார் என்பதை உலகமெல்லாம் அறிந்திருக்கிறது. ஆனாலும் அவர் ஏன்



இங்கு இன்றைக்கு வரவில்லை? இதற்கு முன்னால் இங்கு நான் நடத்தியுள்ள முக்கியமான எல்லா மந்திராலோசனைகளிலும் சின்னப் பழுவேட்டரையர் இருந்திருக்கிறார். அவரைக் கேளாமல் எந்த முடிவும் நாம் செய்ததில்லை. அத்தகைய அறிவிற் சிறந்த வீரர் இப்போது மட்டும் ஏன் வராமலிருக்க வேண்டும்?'' என்று கேட்டார் சக்கரவர்த்தி.

முதன் மந்திரி அநிருத்தர், ''பெருமானே! அதற்கு நான் மறுமொழி சொல்கிறேன். காலாந்தக கண்டர் இன்று குருவுக்கு மிஞ்சிய சீடர் ஆகிவிட்டார்; அண்ணனுக்கு மிஞ்சிய தம்பியும் ஆகிவிட்டார். சக்கரவர்த்தி அழைப்பதாகச் சொல்லியும், வருவதற்கு மறுத்துவிட்டார். பெரிய பழுவேட்டரையர் எவ்வளவோ புத்தி கூறியும் அவர் கேட்டுக் கொள்ளவில்லை! கோட்டைக்குள் வருவதற்கு மறுத்து விட்டார்'' என்றார்.

''ஆனால், ஒன்றைமட்டும் மறந்துவிட வேண்டாம்! சக்கரவர்த்தியின் விருப்பத்தையொட்டி நாம் இங்கு செய்யும் எந்த முடிவையும் தாம் ஒப்புக் கொள்வதாகச் சொல்லியிருக்கிறார்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''ஆனாலும் இங்கு வருவதற்குச் சின்னப் பழுவேட்டரையர் மறுத்ததற்குக் காரணம் என்ன? அவர் மனத்தில் இன்னும் ஏதாவது விபரீத சந்தேகம் தோன்றியிருக்கிறதா?''

''மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய் என்று சொல்வதில்லையா? அவருக்கு இப்போது எது எடுத்தாலும் சந்தேகந்தான்! இங்கே மதுராந்தகர் பத்திரமாயிருக்கிறாரா என்பது பற்றிச் சந்தேகம். வந்தியத்தேவன் பாதாளச் சிறையிலிருந்து தப்பிச் சென்று விட்டது பற்றிச் சந்தேகம்......!''

''காலாந்தக கண்டர் மனத்தில் ஏதேனும் சந்தேகம் உதித்தால் அதற்குக் காரணம் இல்லாமற் போகாது!'' என்று சக்கரவர்த்தி கூறியதும், சிறிது நேரம் அங்கே மௌனம் குடிகொண்டிருந்தது. ஒவ்வொருவர் மனத்திலும் வெவ்வேறு சிந்தனை தோன்றியது.

பெரிய பழுவேட்டரையர் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, ''பெருமானே! என் சகோதரனுடைய சந்தேகத்துக்குக் காரணம் இருக்கலாம்; இல்லாமலும் போகலாம். அவனைப் பற்றி நான் குற்றம் கூறவும் விரும்பவில்லை. ஆனால் அவன் கோட்டைக்குள் வர மறுத்ததற்கு உண்மையான காரணம் என்னவென்பதைச் சொல்லிவிடுகிறேன். இந்தத் தஞ்சாவூர்க் கோட்டை வெகு காலமாக அவனுடைய கட்டுக்காவலுக்குள் இருந்ததாம்! இப்போது பெரிய வேளாரின் அதிகாரத்துக்குக் கோட்டைக் காவல் மாறிவிட்டதாம்! அதனால் அவன் இக்கோட்டைக்குள் வர முடியாதாம்! அவனுடைய இப்படிப்பட்ட அதிகப் பிரசங்கித்தனத்துக்கு யார்தான் என்ன செய்ய முடியும்?'' என்றார்.

''ஏன்? நீதி செய்ய முடியும்!'' என்றார் சுந்தர சோழச் சக்கரவர்த்தி.

சக்கரவர்த்தி இவ்வாறு கூறியதும் எல்லாரும் மௌனமாயிருந்தார்கள்.

மறுபடியும் சுந்தரசோழர், ''அமைச்சர்களே! சோழ குலத்தின் புகழுக்கெல்லாம் அடிப்படையான காரணம் இந்தக் குலத்து மன்னர்கள் நீதி வழுவாத நெறியில் நின்று வந்ததுதான். என் குலத்து முன்னோர் ஒருவர் தமது அருமைக் குமாரன் கன்றுக் குட்டியின் பேரில் தேரை ஏற்றிக் கொன்றதற்காக அவனுக்கு மரண தண்டனை விதித்த வரலாற்றை நீங்கள் எல்லாரும் அறிவீர்கள். பசுக்களுக்கு நீதி வழங்கியவர்கள் குடிமக்களுக்கு எத்தகைய நீதி வழங்கியிருப்பார்கள்? தங்கள் ஆட்சிக்குத் துணை நின்ற தளபதிகளுக்கு எப்படி நியாயம் வழங்கியிருப்பார்கள்? நான் மட்டும் அந்த மரபுக்கு மாறாக நடந்து சோழ குலத்துக்கு ஏன் களங்கத்தை உண்டாக்க வேண்டும்? சின்னப் பழுவேட்டரையரிடமிருந்து தஞ்சைக்கோட்டைக் காவலைப் பெரிய வேளார் கைப்பற்றியது பெருந் தவறு. என் அருமை மகன் அகாலமரணமடைந்த துயரத்தில் மூழ்கியிருந்தபடியால், சின்னப் பழுவேட்டரையருக்கு இழைத்த அநீதியைப் பற்றி நான் சிந்திக்கத் தவறிவிட்டேன். சேநாதிபதி! இக்கோட்டைக் காவலை மீண்டும் அவரிடம் மாற்றிக் கொடுத்து விட வேண்டியதுதான்!'' என்றார்.

கொடும்பாளூர் பெரிய வேளாரின் முகத்தில் ஈயாடவில்லை.

திருக்கோவலூர் மலையமான் அப்போது முன்வந்து, ''ஐயா! தஞ்சைக் கோட்டைக் காவல் சின்னப் பழுவேட்டரையரிடம் இருந்த போது, அந்தப் பொறுப்பை அவர் சரியாக நிறைவேற்றியதாகத் தெரியவில்லையே? சதிகாரன் ஒருவன் இந்தக் கோட்டைக்குள் புகுந்து அரண்மனை அந்தப்புரம் வரைக்கும் வந்து, தங்கள் பேரில் வேல் எறியும் படிக்கும் நேர்ந்துவிட்டதே! யாரோ ஓர் ஊமைப் பெண் குறுக்கிட்டுத் தங்கள் உயிரைக் காப்பாற்றும்படி நேர்ந்துவிட்டதே! அவள் அச்சமயம் வராவிட்டால் என்ன நடந்திருக்கும்?

இந்தத் தஞ்சைக் கோட்டையில் உள்ள ஆயுதச் சாலையில் எண்ணுவதற்கு இயலாத வாள்களும் வேல்களும் ஈட்டிகளும் அடுக்கி வைத்திருந்து என்ன பயன்? இங்கே கோட்டைக் காவலுக்கு என்று இத்தனை வீரர்களும் வேளக்காரப் படையைச் சேர்ந்த வீராதி வீரர்களும் இருந்து என்ன பயன்? தளபதி சின்னப் பழுவேட்டரையர் தமது பொறுப்பைச் சரிவர நிறைவேற்றியதாகச் சொல்ல முடியுமா? அவரிடமிருந்து நம் பெரிய வேளார் கோட்டைக் காவலைக் கைப்பற்றியது எப்படித் தவறாகும்?'' என்று கேட்டார்.

''மாமா! விதியின் கொடுமைக்கு யார் மீது குற்றம் சுமத்தி என்ன செய்வது? தங்கள் அருமைப் பேரன் ஆதித்த கரிகாலனைக் காப்பாற்ற உங்களால் முடிந்ததா? நீங்கள் எல்லாரும் சேர்ந்து எத்தனையோ பிரயத்தனம் செய்தீர்களே?'' என்றார் சக்கரவர்த்தி.

''அதைப் பற்றி விசாரிக்க வேண்டியதும் அவசியந்தான், சக்கரவர்த்தி! கடம்பூர் அரண்மனையில் நேர்ந்த கொடிய சம்பவத்துக்குப் பொறுப்பாளி யார் என்று இன்னும் விசாரணை நடக்கவில்லை. அதைப் பற்றிய உண்மை வெளியாகவும் இல்லை!'' என்றார் மலையமான்.

''பெரிய பழுவேட்டரையரின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தோம். அவர் வந்துவிட்டபடியால், இனி விசாரணை ஆரம்பிக்கப்பட வேண்டும்'' என்றார் சேநாதிபதி பெரிய வேளார்.

''விசாரணை ஆரம்பிப்பதற்கு முன்னால், கொலைக் குற்றம் சாட்டப்பட்ட வந்தியத் தேவன் பாதாளச் சிறையி

---



பிரதம மந்திரி தேசிய கஷ்ட நிவாரண நிதிக்காக ஃபைஸர் ஸ்தாபனம் ஐந்து லட்சம் மதிப்புள்ள அத்தியாவசியமான மருந்துகளை வழங்கியிருக்கிறது. ஃபைஸர் ஸ்தாபன மானேஜிங் டைரக்டர் திரு எஸ். பி. பிள்ளை பாரதப் பிரதமர், ஸ்ரீமதி இந்திரா காந்தியிடம் மருந்துப் பொருள்கள் அடங்கிய பெட்டியை வழங்குகிறார். பிரதமருக்கு அருகே அமைச்சர் திரு பி.வி. சேறி அவர்களையும் வலது கோடியில் ஃபைஸர் ஸ்தாபனத்தைச் சேர்ந்த திரு கே.ஜி. பிள்ளை, திரு நீலகண்டன் ஆகியோரையும் காணலாம்.



தமிழ்நாடு சங்கீத நாடக அகாடமி, பரதநாட்டிய ஆசிரியர் திரு கோவிந்தராஜ பிள்ளைக்கு இந்த வருஷம் 'கலை மாமணி' பட்டம் வழங்கிக் கௌரவித்ததை யொட்டி பம்பாய் கீத கோவிந்த ஹாலில் பேராசிரியர் ஸ்ரீ டி. வி. ராமானுஜம் தலைமையில் பாராட்டு விழா நடைபெற்றது. அவ்விழாவின்போது தலைவர், பாராட்டுப் பரிசினைக் குரு கோவிந்தராஜ பிள்ளைக்கு வழங்குகிறார்.

லிருந்து தப்பி ஓடியது எப்படி? அதற்குப் பொறுப்பு யார் என்பதையும் இப்பொழுதே தீர விசாரிக்க வேண்டும் !'' என்றான் பார்த்திபேந்திரன்.

'' ஆமாம் ; அதுவும் கேள்விப்பட்டேன். சேநாதிபதி ! வந்தியத்தேவன் பாதாளச் சிறையிலிருந்து தப்பி ஓடியது எப்படி? அதற்கு யார் பொறுப்பு ஏற்பது ?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''சக்கரவர்த்தி! அதற்கு மறுமொழி முதன் மந்திரி அநிருத்தர் சொல்ல வேண்டும்!'' என்றார் பெரிய வேளார்.

''பிரபு! அந்தப் பொறுப்பை நானே ஏற்றுக் கொள்கிறேன். வந்தியத்தேவன் தப்பி ஓடியது நான் செய்த ஒரு சிறிய தவறினால்தான். ஆனால் அவனைத் திரும்பக் கொண்டு வந்து ஒப்புவிக்கும் பொறுப்பையும் நானே ஏற்றுக் கொள்கிறேன். அதில் தவறினால் உரிய தண்டனைக்கு உள்ளாகிறேன்'' என்றார் அநிருத்தர்.

'' அந்தப் பொறுப்பை முதன்மந்திரிக்கு முன்னால் என் நண்பன் கந்தமாறன் ஏற்றுக் கொண்டுவிட்டான் ! பாதாளச் சிறையிலிருந்து தப்பி ஓடியவனைத் துரத்திக் கொண்டு போயிருக்கிறான்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

இந்தச் சம்பாஷணைகள் எல்லாம் நடந்து கொண்டிருந்த போது அந்த அறையில் பெண்மணிகள் இருவர் அமர்ந்திருந்தனர். அவர்கள் சக்கரவர்த்தினி வானமாதேவியும் இளைய பிராட்டி குந்தவையுந்தாம்.

வந்தியத்தேவனைக் கந்தமாறன் துரத்திக் கொண்டு போயிருக்கிறான் என்ற செய்தியைக் கேட்டதும் இளையபிராட்டி குந்தவை தேவியின் முகம் மாறுதல் அடைந்ததை முதன் மந்திரி அநிருத்தர் மட்டுமே கவனித்தார்.

பார்த்திபேந்திரனைப் பார்த்து, ''பல்லவ குமாரா! உன் நண்பன் கந்தமாறன் வெகு கெட்டிக்காரன்தான்! ஆனால் சில காரியங்களில் அவனை நம்புவதில் பயனில்லை. அவனுடைய சொந்தக் கடம்பூர் மாளிகையில் வந்து தங்கியிருந்த சோழ நாட்டின் கண்ணுக்குக் கண்ணான இளவரசர் கரிகாலரை அவனால் காப்பாற்ற முடியவில்லையே? சிறையிலிருந்து தப்பி ஓடிய வந்தியத்தேவனை அவனால் பிடிக்க முடியுமா? எனக்குத் தோன்றவில்லை!'' என்றார் முதன்மந்திரி.

தமது கடைசி வார்த்தைகளில் அடங்கிய குறிப்பைக் குந்தவைப் பிராட்டி தெரிந்து கொண்டாள் என்பதையும் கவனித்துக் கொண்டார்.

''மேலும், கந்தமாறனும் வந்தியத்தேவனும் அத்தியந்த நண்பர்கள் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்!'' என்றார் சேநாதிபதி வேளார்.

''அது பழைய கதை. சக்கரவர்த்தி! சோழ குலத்துக்குத் துரோகம் செய்த யாரும் சம்புவரையர் குலத்துக்குச் சிநேகமாயிருக்க முடியாது!'' என்றார் பெரிய சம்புவரையர்.

''அதைப் பற்றி இப்போது என்ன பேச்சு? வந்தியத்தேவனைத் திரும்பக் கொண்டு வந்து ஒப்புவிக்கிற பொறுப்பைத்தான் முதன் மந்திரி அநிருத்தர் ஏற்றுக்கொண்டு விட்டாரே? சேநாதிபதி! தஞ்சைக் கோட்டைக் காவலைத் திரும்பச் சின்னப் பழுவேட்டரையரிடம் ஒப்புவித்துவிட வேண்டியதுதான் !'' என்றார் சுந்தர சோழர்.

'' சக்கரவர்த்தியின் கட்டளை இது என்றால், நிறைவேற்றி வைக்கச் சித்தமாயிருக்கிறேன் !'' என்றார் சேநாதிபதி பெரிய வேளார். அவருடைய குரலின் தொனியில் அவரது உள்ளத்தில் பொங்கிய கோபம் வெளியாயிற்று.

''கொடும்பாளூர் மாமா! தாங்கள் என்னைவிட வயதிலும் அநுபவத்திலும் எவ்வளவோ மூத்தவர். என் தந்தையைப் போல் தங்களிடம் நான் பக்தி கொண்டவன். தங்களுக்கு நான் கட்டளையிட முடியுமா? என் அபிப்பிராயத்தைச் சொன்னேன். இந்த விஷயத்தில் இங்குள்ள மற்றவர்களின் அபிப்பிராயத்தையும் தெரிந்துகொண்டு மேலே செய்ய வேண்டியதைப் பற்றிப் பிறகு கவனிக்கலாமே?'' என்றார் சக்கரவர்த்தி.

'' எனக்கு அதில் விருப்பம் இல்லை. சின்னப் பழுவேட்டரையர் தமது கடமையில் தவறி விட்டார் ; ஆகையால் அவரிடம் கோட்டைக் காவலைத் திரும்பக் கொடுக்கக் கூடாது!'' என்று கண்டிப்பாக மறுத்துக் கூறினார் திருக்கோவலூர் மலையமான்.

''முதன் மந்திரியின் கருத்து என்ன?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''நடந்தது நடந்துவிட்டது. இப்போது கோட்டைக் காவலை மாற்றுவதில் சில கஷ்டங்கள் ஏற்படக் கூடும். இராஜ்ய உரிமை சம்பந்தமாகப் பேசி முடிவு செய்வதற்காக எங்களையெல்லாம் அழைத்திருக்கிறீர்கள். அந்த விஷயம் முடிவான பிறகு இதை எடுத்துக்கொள்ளலாம்'' என்றார் அநிருத்தர்.

"சின்னப் பழுவேட்டரையர் இல்லாமல் நாம் எந்த முடிவுக்கும் வர முடியாது! தனாதிகாரி! தங்கள் கருத்து என்ன?" என்று கேட்டார் சுந்தர சோழச் சக்கரவர்த்தி.

"மலையமான் கருத்தை நானும் ஒப்புக்கொள்கிறேன். என் சகோதரன் தன் கடமையில் தவறிவிட்டான். பொறுப்பைச் சரிவர நிறைவேற்றவில்லை. ஆகையால் கோட்டைக் காவலை அவனிடம் திருப்பிக் கொடுக்க வேண்டியதில்லை!" என்றார் பெரிய பழுவேட்டரையர்.

அவருடைய சகோதர வாஞ்சையை அங்கிருந்த எல்லோரும் நன்கு அறிந்தவர்களாதலால் பெரிய பழுவேட்டரையரின் மேற்கூறிய மறுமொழி அனைவருக்கும் வியப்பை உண்டாக்கியது. அதைக் காட்டிலும், சக்கரவர்த்தி தொடர்ந்து கூறியது அதிக வியப்பையும் திகைப்பையும் உண்டாக்கிவிட்டது.

"தனாதிகாரி! சின்னப் பழுவேட்டரையர் அவருடைய கடமையில் தவறவில்லை. நானும் தாங்களுந்தான் அவருடைய வார்த்தையைக் கேட்கத் தவறிவிட்டோம். அவர் அவ்வப்போது செய்த எச்சரிக்கைகளையும் நாம் இருவருமே பொருட்படுத்தவில்லை. எல்லாரும் கேளுங்கள்: மதுரை வீர பாண்டியனுடைய ஆபத்துதவிகளைப் பற்றிச் சின்னப் பழுவேட்டரையர் அடிக்கடி எனக்கு எச்சரிக்கை செய்து வந்தார். அவர்கள் இந்தக் கோட்டைக்கு உள்ளேயே தொடர்பு வைத்துக் கொண்டிருப்பதாகவும் கூறினார். ஆகையால் என் அரண்மனைக்கும் அந்தப்புரத்துக்கும்கூட இன்னும் கடுமையான காவல் போட வேண்டும் என்று வற்புறுத்தினார். தனாதிகாரியின் அரண்மனைக்கும் என் அரண்மனைக்கும் உள்ள இரகசிய வழிகளை அடைத்துவிட வேண்டும் என்றும், இரண்டு அரண்மனைகளுக்கும் மத்தியில் காவல் போட வேண்டும் என்றும் வற்புறுத்தினார். பெரிய பழுவேட்டரையரிடம் காலாந்தக கண்டர் எவ்வளவு பக்தி கொண்டவர் என்பது உங்களுக்கெல்லாம் தெரிந்த விஷயமே. ஆயினும் தனாதிகாரி பேரிலேயே அவர் என்னிடம் புகார் சொன்னார். தம் தமையனார் ஏமாற்றப்பட்டு வருவதாகவும், அவர் அரண்மனையிலேயே சதிகாரர்கள் வருவதாகத் தாம் சந்தேகிப்பதாகவும் தெரிவித்தார். பெரிய பழுவேட்டரையரை அவருடைய அரண்மனையிலிருந்து வேறு அரண்மனைக்குப் போகச் சொல்லிவிட வேண்டும் என்றும், பொக்கிஷத்தையும் வேறு இடத்துக்கு மாற்றிவிட வேண்டும் என்றும்



"க்ருதயுகாரம்பத்திலே நாரதராகப்பட்டவர் கைலாசபுரம் சென்று, மெய்மறந்த நிலையில் கண் மூடி, 'ஹலோ நாராயணா! ஹலோ வாசுதேவா! ஹலோ முகுந்தா! ஹலோ வைகுண்டவாஸா!' என்றவர் கண் திறந்து பார்த்ததும்தான் உணர்ந்தார், நாம் ராங் நம்பருக்கு வந்துவிட்டோம் என்று....."

"பாகவதர் வீட்டில் இன்று புதுசா டெலிபோன் வந்திருக்கிறதாம்."

யோசனைகள் கூறினார். அந்த எச்சரிக்கைகளையெல்லாம் நான் செவியில் வாங்கிக் கொள்ளவே இல்லை!...."

இச்சமயம் பெரிய பழுவேட்டரையர் தமது தொண்டையை ஒருமுறை கனைத்துக் கொண்டார். அதைக் கேட்டுச் சுந்தரசோழர் தம் பேச்சை நிறுத்தினார்.

"சக்கரவர்த்தி! என் பேரில் தங்களுடைய கருணை காரணமாகத் தாங்கள் சொல்லாமல் விட்டதையும் நான் சொல்கிறேன். என்னுடைய அவமானத்தைத் தாங்கள் வெளியிட விரும்பவில்லை; நானே வெளியிட்டுக் கொள்கிறேன். முதிய பிராயத்தில் நான் மோக வலையில் மூழ்கி மணந்து கொண்ட நந்தினியைப் பற்றி என் சகோதரன் எனக்கு எச்சரிக்கை செய்தான். மந்திரவாதி என்று சொல்லிக் கொண்டு அவளிடம் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளின் தலைவன் வந்து போவதாகவும் எச்சரிக்கை செய்தான். மாய மோகத்தில் மூழ்கி, கண்ணிழந்து குருடனாயிருந்த நான் அதற்குச் செவி சாய்க்கவில்லை. ஆனாலும் அவன் தன் கடமையிலிருந்து தவறியவன்தான்! அவனுக்கு அவ்வளவு நிச்சயமாகத் தெரிந்திருக்கும்போது அவன் அந்தப் பாதகியையும் அவளிடம் வந்து கொண்டிருந்தவர்களையும் கண்டுபிடித்துக்

கொன்றிருக்க வேண்டும். நான் தடுத்திருந்தால், தலைவன் என்று பாராமல் அவனுடைய கை வாளால் என்னையும் கொன்றிருக்க வேண்டும். அவ்விதம் செய்யத் தவறியது அவன் கடமையைக் கைவிட்டதுதானே?'' என்று பெரிய பழுவேட்டரையர் தம் பெரிய குரலில் கூறியதைக் கேட்டவர்களுக்கெல்லாம் மெய் சிலிர்த்தது. அவருடைய வார்த்தைகளில் ததும்பிய சொல்ல முடியாத மன வேதனையை அறிந்துகொண்டு ஒவ்வொருவரும் வேதனைப் பட்டார்கள்.

''தளபதிகாரி! கொஞ்சம் பொறுங்கள்! தங்கள் சகோதரர் சின்னப் பழுவேட்டரையர் கடமையைக் கருதி அவ்வாறு செய்யக் கூடியவர்தான். அதற்கு நானே தடையாக இருந்தேன். தங்களைப் பற்றியாவது தங்கள் இளைய ராணியைப் பற்றியாவது ஏதாவது புகார் சொல்வதாயிருந்தால் என் முகத்திலேயே விழிக்க வேண்டாம் என்று கட்டளையிட்டேன். தங்களுடைய அரண்மனையிலிருந்து தங்களை வேறிடத்துக்கு மாற்றிவிட்டு அங்கே வேளக்காரப் படையைக் கொண்டுவைக்கும் யோசனையையும் நிராகரித்தேன். அப்படி அஞ்சி அஞ்சி வாழ்ந்து எதற்காக இந்த உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்று கேட்டேன். என் மனத்தில் குடிகொண்டிருந்த வேதனையும் என் உடலைப் பற்றியிருந்த நோயும் என்னை வாழ்க்கையை வெறுக்கும்படி செய்திருந்தன. பழுவூர் மாமா! எனக்காவது என் குலத்துக்காவது நேர்ந்திருக்கும் எந்தத் தீங்குக்கும் தாங்கள் எவ்வகையிலும் பொறுப்பாளியல்ல; தங்கள் சகோதரரும் பொறுப்பாளியல்ல. அவற்றை நானேதான் தேடிக் கொண்டேன்!''

இவ்வாறு சக்கரவர்த்தி கூறியதைக் கேட்டுக் கொண்டிருந்த பெரிய பழுவேட்டரையரின் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பெருகியது.

''ஆம்; சின்னப் பழுவேட்டரையர் மீது அணுவளவும் தவறில்லை. வந்தியத்தேவன் என்னும் ஒரு வாலிபன் இங்கு முதன் முதல் வந்திருந்த போதே காலாந்தக கண்டர் எச்சரிக்கை செய்தார். அவன் இக்கோட்டைக்கு வெளியில் பல்லக்கில் வந்த பழுவூர் இளைய ராணியோடு இரகசியம் பேசியதாகக் கூறினார். அவனும் சோழ குலத்தின் எதிரிகளோடு சேர்ந்து சதி செய்பவனாக இருக்கலாம் என்று சந்தேகப்பட்டார். பழுவூர் முத்திரை மோதிரத்தைக் காட்டி அவன் கோட்டைக்குள்ளே பிரவேசித்ததையும் பழுவூர் அரண்மனையின் அந்தப்புரத்து இரகசிய வழியாகவே அவன் இங்கிருந்து தப்பிச் சென்றிருக்க வேண்டும் என்றும் கூறினார். அதையெல்லாம் நான் பொருட்படுத்தாமல் அலட்சியம் செய்து வந்தேன். அறிவிற் சிறந்த மேதாவியான நம்முடைய முதன் மந்திரி அநிருத்தரும், என் செல்வக் குமாரி இளைய பிராட்டியும்கூட வந்தியத்தேவன் விஷயத்தில் ஏமாந்து போனார்கள். அவன் மூலமாக முக்கியமான ஓலைகள் அனுப்பி வைத்தார்கள்.....''

அநிருத்தர் இச்சமயம், ''சக்கரவர்த்தி! நான் ஒரு வேளை ஏமாந்து போயிருக்கலாம். ஆனால் இளைய பிராட்டி அப்படியெல்லாம் எளிதில் ஏமாந்து போகக் கூடியவர் அல்ல. வந்தியத்தேவனிடம் ஓலை அனுப்பிவிட்டு, அவன் நடவடிக்கைகளைக் கவனிக்க என்னை ஏற்பாடு செய்யும்படி கூறினார். நான் ஈழத்துக்கும் என் சீடன் ஆழ்வார்க்கடியானை அனுப்பினேன்; காஞ்சிக்கும் அவனைத் தொடரும்படி அனுப்பியிருந்தேன்......'' என்றார்.

''அப்படியே இருக்கட்டும்; நீங்கள் இருவரும் அவனிடம் ஏமாறவில்லை என்றே வைத்துக் கொள்வோம். பாதாளச் சிறையிலிருந்து அவனும் இன்னொருவனும் தப்பிச் சென்றது உண்மைதானே? அதை நீங்கள் யாரும் மறுக்க முடியாது அல்லவா? சின்னப் பழுவேட்டரையரிடம் இந்தக் கோட்டைக் காவல் இருந்திருந்தால், அவ்வாறு அவர்கள் ஒருகாலும் தப்பிச் சென்றிருக்க முடியாது. ஆகையால், சேநாதிபதி! சின்னப் பழுவேட்டரையரை உடனே தருவித்து அவரிடம் தஞ்சைக் கோட்டைக் காவலைத் திரும்ப ஒப்புவித்து விடுங்கள். என்னுடைய கட்டளை என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள்!'' என்றார் சக்கரவர்த்தி.

''அப்படியே பிரபு! நாங்கள் இப்போது விடைபெற்றுக் கொள்ளலாமா?'' என்று சேநாதிபதி பூதி விக்கிரமகேசரி கேட்டார். அவருடைய குரலில் ஆத்திரம் தணிந்திருந்தது. பழுவேட்டரையர்கள் விஷயத்தில் சுந்தர சோழர் காட்டிய அன்பும் ஆதரவும் குற்றத்தைப் பொறுத்துக் குணத்தையே பாராட்டிய நேசப் பான்மையும் சேநாதிபதியின் உள்ளத்தையும் உருக்கி விட்டிருந்தன. அவர் ஒருகணம் அப்படியே திகைத்துப் போய்விட்டார்.

''ஆமாம்; இப்பொழுது எல்லாரும் போகலாம். சின்னப் பழுவேட்டரைய

ரும் வந்த பிறகு, மறுபடியும் கூடி மேலே நடக்க வேண்டியதைப் பற்றிப் பேசலாம். இராஜ்ய உரிமையைப் பற்றி என் பெரிய அன்னை மூதிய பிராட்டியாரோடு இன்னும் நான் பேசி முடிக்கவில்லை. அதற்கும் கொஞ்சம் அவகாசம் வேண்டும்!'' என்றார் சக்கரவர்த்தி.

அனைவரும் புறப்படும் சமயத்திலே பார்த்திபேந்திரன், ''ஐயா! சிநேகத் துரோகியும் இராஜத் துரோகியுமான வந்தியத்தேவனைத் திரும்பக் கொண்டு வந்து ஒப்புவிக்கும் பொறுப்பை முதன் மந்திரி ஒப்புக் கொண்டார். அதை அவருக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். என் உயிருக்குயிரான ஆப்த நண்பராக இருந்த இளவரசர் ஆதித்த கரிகாலரின் கொடிய மரணத்தை வேறு யார் மறந்தாலும் நான் மறக்க முடியாது. அவருடைய மரணத்துக்குக் காரணமாயிருந்த குற்றவாளியைக் கண்டுபிடித்துத் தண்டித்தேயாக வேண்டும்!'' என்றான்.

பெரிய பழுவேட்டரையர் இழச் சிங்கத்தின் கர்ஜனையைப் போல் ஒரு முறை தொண்டையைக் கனைத்துக் கொண்டார். ஏதோ பேச எண்ணியவர் பின்னர் தம் கருத்தை மாற்றிக் கொண்டதாகத் தோன்றியது. ஒன்றும் சொல்லாமல் வெளியேறினார். மற்றவர்களும் அவரைப் பின் தொடர்ந்து சென்றார்கள்.

* * *

அன்று மாலையே சக்கரவர்த்தியின் கட்டளைப்படி தஞ்சாவூர்க் கோட்டையின் காவல் பொறுப்பு மீண்டும் சின்னப் பழுவேட்டரையரிடம் ஒப்புவிக்கப்பட்டது. முதலில் அவர் அதை ஏற்றுக் கொள்ளத் தயங்கினார்; ஆட்சேபணை களும் கூறினார். இதிலும் ஏதேனும் சூழ்ச்சிகள் இருக்கக்கூடும் என்று தம் சந்தேகத்தை வெளியிட்டார். இது சக்கரவர்த்தியின் கண்டிப்பான கட்டளை என்று பெரிய பழுவேட்டரையர் எடுத்துக் கூறிய பிறகு கோட்டைக் காவலை மீண்டும் ஏற்றுக் கொண்டார்.

கொடும்பாளூர் வீரர்களில் ஒருசிலரைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் கோட்டையிலிருந்து வெளியேற்றப்பட்டார்கள். கோட்டை வாசலிலும் மதில் சுவர்களிலும் முன்போல் பழுவூர் வீரர்கள் காவல் புரியத் தொடங்கினார்கள்.

இந்த மாறுதல் விபரீதமான விளைவுகளுக்குக் காரணமாயிற்று. பழுவூர் வீரர்களுக்கும் கொடும்பாளூர் வீரர்களுக்கும் அடிக்கடி சச்சரவு மூண்டு சில சமயம் குழப்பமும் விளைந்தது.

''பொன்னியின் செல்வர் வாழ்க!'' என்ற கோஷமும், ''இளவரசர் மதுராந்தகர் வாழ்க!'' என்ற கோஷமும் மாறி மாறிப் போட்டிக் கோஷங்களாக எழுந்தவண்ணமிருந்தன.

இந்தக் கோஷங்கள் நாடெங்கும் பரவின; பொதுமக்களும் அவற்றில் கலந்து கொண்டார்கள்.

அடுத்த மூன்று தினங்களில் சோழ நாடு முழுவதும் ஒரே அல்லோல கல்லோலமாகிவிட்டது.

வாய்ச் சண்டை கைச் சண்டையாகித் தடியடிச் சண்டையாக முற்றியது. கழிகளும் தடிகளும் வாள்களுக்கும் வேல்களுக்கும் இடங் கொடுத்துச் சென்றன.

சில நாளைக்கு முன்பு சோழவள நாட்டைப் பாழ்படுத்திய புயலையும் வெள்ளத்தையும் போலவே இப்போது ஆத்திரப் புயலும் வெறியாகிய வெள்ளமும் தாலாபுறமும் பரவி நாட்டில் நாசத்தை விளைவித்தன. (தொடரும்)

ரயில்வே போர்டு சேர்மன் கங்கூலி 1964ம் ஆண்டு புயலில் பாம்பன் பாலம் பழுதானபோது அதைச் செப்பனிட்டுக் கொடுத்தார். அப்பொழுது நிதி அமைச்சராக இருந்த ஸ்ரீ டி. டி. கே. பாராட்டிச் சொன்னது: "பத்துக் கங்கூலிகள் இருந்தால் போதும். இந்தியாவின் தோற்றத்தை மாற்றி அமைத்து விடலாம்."

ஹிந்துஸ்தான் டைம்ஸ்

'பாபு'



"நம் கல்யாணத்துக்கு முன்பு நீ உன் உடல், பொருள், ஆவி எல்லாவற்றையும் எனக்குத் தருவதாகச் சொன்னாயே, 'அட்லீஸ்ட்' நீ கேட்கிற காப்பியையாவது ஆவியோடு கொடுக்கக்கூடாதா?"

# விக்டோரியாவுக்கு விடுமுறை!

**மா**று வேஷத்தில் நகர்வலம் வந்த அரசர்களைப் பற்றி கதைகள் நமக்கு நிறையத் தெரியும்.

பிரிட்டிஷ் அரசி விக்டோரியா ஒரு சமயம் மாறு வேஷம் பூண்டார். ஆனால் இது அரசக் கடமை என்ற அளவில் நகர்ப் பரிசோதனைக்காக அல்ல. தப்பி ஓடுவதற்காக! எதிரிடமிருந்தா? இல்லை; தம்மிடமிருந்தே தப்பி ஓடினார் விக்டோரியா !

அவருக்கு ராஜ்ய பாரம் தாங்க முடியாத சுமையாகி விட்டது. அரசிக்குரிய கட்டுப்பாடுகளும் சம்பிரதாயங்களும் அலுத்துவிட்டன. சிட்டுக்குருவி மாதிரி சில காலமாவது சுதந்திரமாக அலைந்து திரிந்து விட்டு வர விரும்பினார்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினி, அத்தனை சுலபமாக அரண்மனை வாழ்வின் ஆடம்பரத்தையும் ஜபர்தஸ்துக்களையும் விட்டு விலகிச் சென்றுவிட முடியுமா ?

ஆனாலும் அரசி விக்டோரியா சாமர்த்தியமாக இதைச் சாதிக்கவே செய்தார். இரண்டு மாதங்கள் தாம் அரசி விக்டோரியா என்ற நினைவே இல்லாமல், யாரும் அறியாமல் ஒரு சாதாரணப் பெண் போல ஆனந்தமாக விடுமுறை அநுபவித்தார். ஜமைக்கா ஜர்னல் என்ற தலைப்பில் இவ்விடுமுறையின் போது தமக்கு ஏற்பட்ட அநுபவங்களை அரசி விக்டோரியா எழுதி வைத்திருக்கிறார். அது ஒரு நூற்றாண்டு காலத்துக்குப் பிறகு சென்ற ஜூலை மாதம் தான் ப்ராபரோனில் உள்ள பழைய தஸ்தாவேஜுகள் இடையில் அகப்பட்டது.

விக்டோரியாவின் கணவர் இளவரசர் ஆல்பர்ட், அறிவாற்றல் மிக்கவர். விக்டோரியாவுக்குச் சக்கரவர்த்தினி பதவியைத் திறம்பட வகிப்பதில் யோசனைகள் கூறி வழிகாட்டி வந்தார். கணவரிடம் விக்டோரியாவுக்கு அளவு கடந்த மதிப்பு உண்டு. ஆனால் துரதிர்ஷ்டவசமாக 1861ம் ஆண்டில் ஆல்பர்ட் இறந்து போனார். விக்டோரியா துக்கத்தில் ஆழ்ந்தார். இதன் பின் பத்து ஆண்டுகள்வரை விக்டோரியா ராஜீய விவகாரங்களிலும் பொது நிகழ்ச்சிகளிலும் அதிகமாகப் பங்கெடுத்துக்கொள்ளவில்லை. பெரும்பாலும் வேல்ஸ் இளவரசரிடமே பொறுப்புக்களை ஒப்படைத்தார். இவர் இவ்வாறு ஒதுங்குவதை உயர் அதிகாரிகளும் பிரதம மந்திரி கிளாட்ஸ்டோனும் மட்டுமின்றி மக்களும்கூட விரும்பவில்லை. இவர்களின் முணுமுணுப்பு அரசி விக்டோரியாவுக்கு மேலும் வேதனை அளித்தது. எங்கேயாவது கண் காணாத இடத்துக்கு ஓடிப் போய் விட்டால் என்ன என்று தோன்றியது. ஆகவே, ரகசியமாக ஒரு திட்டம் தீட்டி அதன்படி மிஸஸ் கிங் என்று தமக்குத் தாமே பெயர் சூட்டிக் கொண்டு கப்பலேறி விட்டார், ஜமைக்காவுக்கு. அவருடன் இந்த அந்தரங்கத்தைப் பகிர்ந்து கொண்ட ஒரு சிலர் பூரண ஒத்துழைப்பு நல்கினர்.

ஆல்பர்ட் ஹால் என்ற அரங்கினை இதற்குச் சில தினங்களுக்குப்பின் விக்டோரியா அரசி திறந்து வைப்பதென ஏற்பாடாகியிருந்தது. ஹாமிஷ் பிரௌன் என்ற பெண்மணியை அரசி விக்டோரியா மாதிரியே வேஷம் தரிக்கச் செய்து திறப்பு விழா தடை ஏதுமின்றி நடக்க ஏற்பாடு செய்து விட்டார் !

அரசி பிரிட்டனில் இல்லை என்கிற விவரம் சில நாட்களுக்குப் பிறகு பிரதம மந்திரி கிளாட்ஸ்டோனுக்கு எப்படியோ தெரிந்துவிட்டது. ஆனால் இந்த நாடகத்தை அம்பலப்படுத்த அவருக்குத் துணிவில்லை. ஆகவே அவர் வழக்கம் போல் வாரம் ஒரு கடிதம் ராஜீய விவகாரங்களைப் பற்றி எழுதி விண்ட்ஸர் அரண்மனைக்கு அனுப்பி வந்தார் — அவற்றைப் பார்க்க அரசி அங்கே இல்லை என்பது தெரிந்திருந்தும்கூட. அதே சமயம் பொறுக்கி எடுத்த சில வீரர்களைச் சாமானிய மக்கள் போல் வேஷம் அணிந்து ஜமைக்காவுக்கு உடனே கப்பலேறிச் செல்லுமாறு பணித்தார். அரசியின் மெய்க்காவலர்களாக அரசி அறியாமலேயே இவர்கள் பணியாற்ற வேண்டும் என்பது கட்டளை. இங்கிலாந்தில், அரசி தொண்டைப் புண் காரணமாக அரண்மனையை விட்டு அதிகம் வெளி வராமல் இருக்கிறார் என அறிக்கை வெளியிடப்பட்டது.

**சா**மானியப் பெண்ணாக மாறிய அரசிக்குத்தான் எத்தனை விசித்திரமான அநுபவங்கள்! அவர் முதன் முதலில் போய் அறை எடுத்துத் தங்கிய இடம் கௌரவ



மான பெண்கள் இருக்கக்கூடிய இடமல்ல என்பது விரைவிலேயே தெரிந்து போய் விட்டது. 'அவசரம்' அவசரமாக மூட்டை கட்டிக் கொண்டு வேறு தோட்டத்தை நாடி ஓடினார் அரசி!

அடுத்தாற்போல் இவர் போய்த் தங்கிய தோட்டம் கண்ணியமான ஒன்றுதான். ஆனால் அங்கே வேறு ஒருவித ஆபத்து வந்து சேர்ந்தது! அர்னால்ட் வேட் என்ற பெயர் கொண்ட சர்க்கஸ் முதலாளி ஒருவன் அங்கு தங்கியிருந்தான். அவன் மிஸஸ் கிங் தனது சர்க்கஸில் சேர வேண்டும் என்று வற்புறுத்தியதோடு நில்லாது சில நாட்களில் மிஸஸ் கிங், மிஸஸ் வேடாக மாற வேண்டும் என்றும் நிர்ப்பந்திக்க ஆரம்பித்து விட்டான்!

ஆண்டவனையும் அரச பரம்பரையையும் மதிக்காத குடியரசுக் கட்சியினர் ஓரிடத்தில் அரசியை இழிவுபடுத்தும் விதமாகச் சுவரில் ஏதேதோ எழுதி வைத்தனர். இதைப் பார்த்த அரசிக்குப் பொறுக்க முடியவில்லை. யாரும் அறியாமல் ஒரு சமயம் அதே சுவரை நெருங்கி அதில் எழுதியிருந்ததைக் கரித்துண்டால் அடித்துவிட்டு 'ஆண்டவன் அரசியைக் காப்பாளுக!' என்ற வாசகத்தை எழுதிவிட்டு வந்தார்!

இவ்வாறு மிக சாமானிய மக்களைப் போல் நடந்து கொள்ளும் அரிய வாய்ப்பு அரசிக்குக் கிட்டியது. சர்க்கஸ் முதலாளி, உயரே இழுத்துக் கட்டப்பட்ட கயிற்றின் மேல் நடக்க அவருக்குச் சொல்லிக் கொடுத்தான். இதில் தாம் வெகு சீக்கிரம் தேர்ச்சி பெற்றதாக ஜமைக்கா ஜர்னலில் எழுதியிருக்கிறார் விக்டோரியா.

இவர் இங்கிலாந்துக்குத் திரும்ப வேண்டிய நாள் நெருங்கி வந்துவிட்டதை அறிந்த சர்க்கஸ் முதலாளி முன்னிலும் தீவிரமாக அவரைத் தம் மனைவியாக்கிக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டான். சர்க்கஸில் முழு நேர நிரந்தர ஊழியராக அவரை ஏற்பதாக ஆசை காட்டினான். 'ஒரு நாளைக்கு இரண்டு தடவை நீ கயிற்றின் மேல் நடக்கும் வித்தையைச் செய்து காட்டலாம்' என்று அன்புடன் சொல்லிப் பார்த்தான். அவனிடமிருந்து விடைபெற்றுத் தப்பி வருவது அரசிக்குப் பெரும் பாடாகப் போய்விட்டது!

விடுமுறை முடிந்து கப்பலேறி இவர் இங்கிலாந்துக்கு வந்து இறங்கிய போது இவருக்கு வயது ஐம்பத்தொன்று. தங்கக் கூட்டிலிருந்து தமது வாழ்நாளில் ஒருமுறையாவது தப்பிச் சென்று சுதந்திரப் பறவையாகத் திரியும் பாக்கியம் கிடைத்ததை இவர் தமது கடைசிநாள் வரையில் எண்ணி எண்ணி மகிழ்ந்திருப்பார் அல்லவா?—வி.எஸ். [illegible]



1. சென்னை ராஜா அண்ணாமலைபுரத்திலுள்ள திருமதி நாராயணி அம்மாள் கல்யாண மண்டபத்தில் செட்டிநாட்டு ராணி மெய்யம்மை ஆச்சி அவர்களின் 67வது பிறந்த நாள் விழாவின் போது பத்மஸ்ரீ வைத்திய சுப்பிரமணிய அய்யர் வரவேற்புரை நிகழ்த்தினார்.

படத்தில் ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்களும் திரு தாமோதரன் அவர்களும் அமர்ந்திருக்கிறார்கள். விழாவுக்குத் தலைமைவகித்த சௌந்தரம் கைலாசம் அவர்கள், ராஜா சர் முத்தையா செட்டியார் அமைப்புகளின் பணியாளர் மனமகிழ் மன்றத்தைத் தொடங்கி வைத்தார்.



★

2. சமீபத்தில் தருமபுரத்துக்கு விஜயம்செய்த பத்மஸ்ரீ வைத்திய சுப்பிரமணிய அய்யர் அவர்களுக்குத் தருமபுர ஆதீனகர்த்தர் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார்.

# மூன்று மந்திரவாதிகள்

கதை: வாண்டுமாமா

சித்திரம்: ராஜு

6


மன்னர் சொன்னது உண்மைதான்.
இவர்களில் யார் சிறந்த அழகி என்றோ
உயிருடனுள்ளவள்யார் என்றோ எப்படித்
தீர்மானிப்பது? கடுமையான பரீட்சை தான்.


ஆ! இந்தச் சித்திராங்கி...?
இவள் கண்கள் என்னைப்
பார்த்து இமைக்கின்றன.
அந்தக் குழலாய் ஏதோ
பேசத் துடிக்கிறது-இவளே
உயிருள்ளவள். இவள்
உலகின் எந்த மூலையி
லிருந்தாலும் அடைக்கத்
தக்கவள்.


என்ன அதிசயம்!
சித்திரத்தில் சலனம்.
ஆ... இது என்ன? மற்ற
சித்திரங்கள் எல்லாம்
மறைந்து விட்டனவே...


அதுவரை சித்திரப் பாவையே
உயிருள்ளவள். 'எங்கிருந்தாலும்
உன்னைக் கண்டு பிடித்து மணப்பேன்'
என்றதும் மற்ற சித்திரப்பாவைகள்
மறைந்து விட்டன. இவள் நாணிக்
கண் புதைத்தாள். இது என்ன
விந்தை?


விந்தையல்ல விக்ரமா. அதுதான் விதி.
நீ குறிப்பிட்டது என் மகள் சுஜாபாவின்
படம். அவள் கொடிய மந்திரவாதி ஒருவ
னின் கைதியாக இரும்புக் கோட்டை
யில் சிறை வைக்கப் பட்டிருக்கிறாள்.


இந்தப் பரீட்சையில் இது வரை யாருமே
தேறியதில்லை. ஆகவே உன்னிடம் எனக்கு
நம்பிக்கை ஏற்படுகிறது. ஆனால் அந்த
மந்திரவாதியோ பயங்கரமானவன்.
அதை நினைக்கும் போது தான்...
கவலைப்படாதீர்கள்.
வெற்றியோடு திரும்புவேன்.
விடை கொடுங்கள்.


இந்த இருண்ட கானகத்தில் எத்தனை நாட்களாகச் சுற்றிக் கொண்டிருப்பது? இங்கிருந்து வெளியேற வழி தெரியவில்லையே...


அரசகுமாரனே! அஞ்ச வேண்டாம். நான் வருகிறேன் உன் உதவிக்கு...
யாரது...? எங்கிருந்து பேசுகிறீர்கள்?


என்னை உன் தோழனாக ஏற்றுக் கொள். உனக்குப் பல விதத்திலும் உதவியாக இருப்பேன் நான்.
யார் நீ? எந்த விதத்தில் எனக்கு நீ உதவியாக இருப்பாய்?


என் பெயரா?...ம் நெட்டையன் என்றே கூப்பிடேன். என் திறமையை உனக்குக் காட்டவா? அதோ அந்த மரத்தின் உச்சியில் ராஜாளியின் கூடு தெரிகிறதா உனக்கு?
தெரியவில்லையே. எத்தனை உயரத்தில் இருக்கிறது. எப்படிப் பார்க்க முடியும்?


இதோ பார்... ராஜாளியின் முட்டை. என்னால் இன்னும் கூட உயரமாக வளர முடியும். அப்படி வளர்ந்த உயரத்துக்கு ஏற்ற வேகத்துடன் ஓடவும் முடியும்.
விந்தையான மனிதன் தான் நீ!

தொடரும்

இடுக்கண்
களைந்திடும் நட்பு போல்

# வலியைப்
# போக்கிடும்
# 'ஆஸ்ப்ரோ'



'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைன் செய்யப்படுகிறது
அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

நிகோலஸ் (N) தயாரிப்பு

A.G.45.TM

# ஓடிப் போன கணவன்

கணவனிடம் சண்டையிட்டுக் கொண்டு அடம் பிடிக்கும் பெண்களில் சிலர், 'நான் இதோ போய்க் கிணற்றில் விழுந்துவிடுகிறேன்' என்று 'பாவலா' காட்டுவார்கள். அதே போல் ஆண்களிலும் சிலர் தம் மனைவியிடம், 'நான் வீட்டை விட்டு ஓடிப் போய் விடுவேன்' என்று வாய்க்கு வாய் சொல்லுவார்கள். அப்படித்தான் ரகுநாதனும் தன் மனைவி ஜனகாவிடம் வாய்க்கு வாய் சொல்லிக் கொண்டிருந்தான். ஆனால் உண்மையில் அவனுக்கு ஜனகாவை விட்டு அரைநாழிகை கூடப் பிரிந்திருக்க முடியாது. அவளைப் பயமுறுத்துவதற்காகத்தான் இந்த ஆயுதத்தை அவன் கையாளுவது வழக்கம்.

ரகுவின் நண்பன் பாஸ்கர். அவனை வீட்டை விட்டு ஓடிப் போகும்படி தைரியமூட்டி அவனை ஒரு ஹோட்டலில் ஒளிய வைத்து அதனால் பல குழப்பங்களை உண்டாக்கி நாடகம் பார்ப்பவர்களின் வயிறு புண்ணாகும்படியான கைங்கரியத்தைச் செய்கிறான். நாடகத்தில் இன்னும் சில பாத்திரங்களும் கதாநாயகன் ரகுவைப் போலவே வீட்டை விட்டு ஓடி வந்த கேஸ்களாக இருக்கின்றன. இதனால் நாடகம் நீளவும் நகைச்சுவை வளரவும் வழி பிறக்கின்றன. பைத்தியக் கேஸ்களைக் குணப்படுத்தும் டாக்டராக சிவாஜி சதுர்வேதி வந்து நம்மையும் கொஞ்சம் பைத்தியமாக்குகிறார். ஓடிவந்தவனை நமக்குக் காட்டாமலேயே ஓடிப் போனவளுடன் உறவு கொண்ட கம்பெனி மானேஜர் வருகிறார். அவளுக்குக் கணவனாக இருக்கும்படி ரகுவைக் கெஞ்சுகிறார். அதுமட்டுமா, இரண்டு ரௌடிகள் வேறு வருகிறார்கள்; ஓடிப்போன கணவனைக் கண் கலங்கிக் காத்திருக்கும் மனைவியுடன் சேர்ப்பதற்கு. இப்படியாக ஓடிப் போன கணவன் நாடகம் ஓடுகிறது.

ஓடிப் போனவரும்.....

வீட்டை விட்டு ஓடி வந்த கணவன் ஒவ்வொரு நிமிஷமும் மறுபடியும் வீட்டுக்கு (மனைவியிடம்) போகத் தவிக்கும் தவிப்பு ரசிகர்களின் சிரிப்புக்கு இலக்காகிறது. இந்த நாடகத்தில் கதாநாயகர்கள் ரகுவின் மாமனாரும், தகப்பனாரும்தான். ஓடிப்போன ரகுவைத் தேடப் பட்டணம் வரும் அவர்கள் (ராமபத்திரன், ரங்கராஜன்) அவனைத் தேடும் சாக்கில் பட்டணத்துக் காட்சிகளை ரசித்து மகிழும் அழகு அபாரம். ஒருவரையொருவர் மட்டம் தட்டிக் கொள்ளுவதும், பக்கத்து வீட்டுச் சௌந்தரம் மாமியிடம் பயப்படுவதும் ரொம்ப இயற்கையான நடிப்பு. இந்நாடகத்தின் கதாநாயகி ரகுவின் மனைவி ஜனகாதான் என்றாலும் அடுத்த வீட்டு சௌந்தரம் மாமியின் ஆட்சிதான் நாடகத்தில் நடக்கிறது. ஐயரும் அம்மாமியும் அசட்டுத்தனங்களும்தான் இன்றைய நாடக மேடையின் உத்தி — பாஷன்! அந்தப் பாதையில் ஸ்டேஜ் கிரியேஷன்ஸாரின் ஓடிப் போன கணவனுக்கும் வெற்றி என்றுதான் சொல்ல வேண்டும். ஹாஸ்ய நாடகங்களில் அநாவசியமாக 'இது எப்படி, ஏன்?' என்றெல்லாம் கேள்விகளை எழுப்பிக் குழப்பிக் கொள்ளக் கூடாது. அந்தக் கருத்தின்படி இந்நாடகத்திலுள்ள சில குறைகளையும் நாம் பெரிதாக எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. இரண்டு மணி நேரத்துக்குக் கவலைகளை மறந்து சிரித்துக் கொண்டிருக்கலாம். அந்த உதவியை ஓடிப் போன கணவன் ரசிகர்களுக்குச் செய்கிறான். 'காற்றாடி' ராமமூர்த்தி கதாநாயகன் ரகுவாக வந்து இந்தக் கணவன் காற்றாடிக்குச் சரியான சூச்சக் கயிற்றைப் போட்டிருக்கிறார். பட்டத்தின் கயிற்றைக் கையில் பிடித்து ரசிகர்களின் இதயவானிலே ஜோராக மிதக்கும்படி பறக்க விடுபவர் மணக்கால் மணி. ஏனோ அவர் நடிப்பு இந்நாடகத்தில் மனத்தில் நிற்கவில்லை. இயக்குநர் பொறுப்பேற்றதனாலோ? ஒரு பெண் என்னதான் அடுத்த வீட்டு அம்மாமிக்கு மதிப்புக் கொடுத்தாலும் தன் தகப்பனாரையும் மாமனாரையுமே விரட்டுமளவுக்கு அவள் இடங்கொடுப்பாளா என்பதைச் சிந்திக்கக் கூடாது. அப்படிச் சிந்திக்க முற்பட்டால் சிரிக்க முடியாமல் போய்விடும். கண் நிறைந்த மனைவி ஜனகாவாக ஸ்ரீ லலிதா வருகிறார். சௌந்தரம் மாமி (எஸ். என். பார்வதி) பாராட்டுப் பெறுவதற்கு இவர் உதவினாலும் இவரது நடிப்பு சோடை போகவில்லை. இயல்பாக இருக்கிறது. ஓடிப் போன கணவன் நாடக அரங்கைவிட்டு ரசிகர்களை ஓடிப் போகவிடமாட்டான். — கௌசிகன்

....அவரைத் தேடிப் போனவர்களும்





# சென்ட்ரல்

ஏ.வி.ஆர்

காலை 4-25லிருந்து இரவு 10-35 வரை, நூற்றி யிருபத்தைந்து ரயில்கள் சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு வருகின்றன, புறப்படுகின்றன.

- புள்ளி விவரம்

## அத்தியாயம் 14

ஜம்புநாதனுக்கு உட்கார நாற்காலி, பெஞ்சு என்று ஏதும் தேவையில்லை. மேல் துண்டால் தரையைத் தட்டி உதறிவிட்டு, சப்பணம் போட்டு உட்கார்ந்துவிடுவார். இடத்தைப் பற்றியும் அவர் கவலைப் படுவதில்லை. பஸ் நிலையம், ஆஸ்பத்திரி வராந்தா, பள்ளிக்கூடத் திண்ணை, ரயில்வே பிளாட்பாரம் எல்லாம் அவருக்குச் சொந்தம்.

சென்ட்ரலில், கேதாரம் பம்பாயிலிருந்து வந்த அன்று சந்தித்தாரே, அப்போது தாம் ஒரு சிநேகிதர் வீட்டில் தங்கியிருப்பதாக அவனிடம் சொல்லியிருந்தார். அவனும் அதை நம்பியிருந்தான். உண்மையில் ஜம்புநாதன்— குற்றாலம் முதியோர் ஆசிரமத்திலிருந்து ஒரு பெருங்காய விளம்பரமிட்ட காக்கிப் பையுடன் எழும்பூரில் இறங்கி, அங்கேயே பல் தேய்த்து (வெறும் விரலால்) குளித்து விட்டு, நேரே சென்ட்ரலுக்குத் தான் வந்தார். ரயில்கள் எந்தப் பிளாட்பாரத்திலிருந்து அதிகமாகப் புறப்படுவதில்லை, எந்தப் பிளாட்பாரத்துக்கு அதிகமாக வந்து நிற்பதில்லை என்று அறிந்துகொள்ள விசாலமான ஹாலில் தொங்கும் பிரும்மாண்டமான அட்டவணையைப் பார்த்தார். மனத்தால் கணக்குப் போட்டுப் பார்த்தார். கீழ்க்கண்ட விவரம் பதிந்தது.

| பிளாட் பாரம் நெம்பர் | வந்து சேரும் ரயில்கள் | புறப் படும் ரயில்கள் | மொத் தம் |
|---|---|---|---|
| 1 | 6 | — | 6 |
| 2 | 5 | 2 | 7 |
| 3 | 6 | 3 | 9 |
| 4 | 3 | 7 | 10 |
| 5 | 3 | 4 | 7 |
| 6 | 2 | 7 | 9 |
| 7 | 2 | 7 | 9 |
| 8 | 7 | 8 | 15 |
| 9 | 8 | 8 | 16 |
| 10 | 10 | 7 | 17 |
| 11 | 11 | 9 | 20 |

நூற்று இருபத்தைந்து ரயில்கள், காலை நான்கு இருபத்தைந்திலிருந்து இரவு பத்து முப்பத்தைந்து வரை வந்து சேருகின்றன, புறப்படுகின்றன. இந்த நூற்றுஇருபத்தைந்தில் அறுபத்தியொரு ரயில்கள் ஆவடி, பட்டாபிராம், திருவள்ளூர், பொன்னேரி, அரக்கோணம் வரையிலுமே செல்லும் லோக்கல்கள். இவற்றில் பெரும்பாலானவை 8, 9, 10, 11 பிளாட்பாரங்களில் ஆதிக்கம் செலுத்துகின்றன. 7—வது பிளாட்பாரத்தில் இரண்டே இரண்டு ரயில்கள் வந்து சேருகின்றன. ஆனால் ஏழு ரயில்கள் புறப்படுகின்றன. (நல்ல நெரிசல்) 4, 6 பிளாட்பாரங்களும் 7ஐப் போலத்தான். 2, 3, பிளாட்பாரங்களில் வந்து சேருகிற ரயில்கள் அதிகம். 5ம் நெம்பர் பிளாட்பாரத்தைப் பற்றி விசேஷமாக எதுவும் தோன்றவில்லை.

ஜம்புநாதன் பள்ளிக்கூட நாட்களில் கணக்குப் பரீட்சையில் என்ன மார்க்கு

வாங்கினாரோ, ரயிலைப் பற்றிய கணக்குகள் அத்துப்படி. ரயில்வே கால அட்டவணைப் புத்தகத்தை ஒரு தடவை புரட்டிப் பார்த்தால் போதும், எல்லாம் சுந்தர காண்டம் பதிவது போலப் பதிந்துவிடும்.

அவர் இப்போது எல்லாப் பிளாட்பாரங்களையும் விட்டுவிட்டு 1ம் நம்பரில் லயித்துப் போனார். ஒரு ரயில்கூட அங்கிருந்து புறப்படுவதில்லை. ஆறே ஆறு ரயில்கள், காலை 5-25, 11-00, பிற்பகல் 2-30, மாலை 5-15, இரவு 7-15, 9-40 மணிக்கு வந்து சேருகின்றன. முதல் ரயில் அவரை எழுப்பிவிடும். வண்டி காலியானதும், அது திரும்பி யார்டுக்குப் போவதற்குமுன், ஏதாவது ஒரு முதல் வகுப்புப் பெட்டியில் ஏறி, காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, உடை மாற்றிக் கொள்ளலாம். அப்புறம் அவர் பன்னிரண்டு மணிக்குத் திரும்பி வரும்போது அமைதியாக இருக்கும். இரண்டரை ரயில் வருகிற வரை, ஒரு குட்டித் தூக்கம் போடலாம்.

ஒரே ஒரு அசௌகரியம்தான் மனத்தை உறுத்தியது. 1ம் நம்பர் பிளாட்பாரம் வால்டாக்ஸ் சாலையை ஒட்டி யிருக்கிறது. வீதியின் இரைச்சல் காதை அறுத்துக் கொண்டே யிருக்கும். ரிக்ஷா வண்டிக்காரர்களின் சண்டை, போர்ட்டர்களின் கூச்சல் இவையெல்லாம் நாராசமாக இருக்கும்.

ஐம்புநாதன் நிலைமையைச் சீர்தூக்கிப் பார்த்தார். 8, 9, 10, 11 பிளாட்பாரங்களைப் பற்றிக் கனவிலும் நினைக்கக் கூடாது. 7வது பிளாட்பாரத்தில் ஆர். எம். எஸ். இருக்கிறது. தபால் மூட்டைகளும், டிராலிகளும் வழியை அடைத்துக் கொண்டிருக்கும். 6, 5, 4, 3, 2 பிளாட்பாரங்கள் ஒதுங்கி வாழ ஏற்றதல்ல. வந்து, போகிற ரயில் மந்தைகளினிடையே இருக்க முடியாது. பதினொரு பிளாட்பாரங்களில் சிறந்த பிளாட்பாரம் 1ம் நம்பர்தான். அதையும் வேண்டாம் என்றால், அவர் சென்ட்ரலை விட்டுப் போக வேண்டியதுதான்.

ஐம்புநாதன் ஒரு தீர்மானத்துக்கு வந்தால், அவ்வளவுதான். கழுத்தைப் பிடித்துத் தள்ளுகிற வரைக்கும் விடமாட்டார். 1ம் நம்பர் பிளாட்பாரத்தில், பார்சல் ஆபீஸை யெல்லாம் தாண்டி, கோடியில் குடியேறினார். ஒரு சிமெண்ட் பெஞ்சியில் பெருங்காய விளம்பரப் பையை வைத்துவிட்டு, கீழே உட்கார்ந்தார். அப்போது காலை



மணி எட்டு. இன்னும் மூன்று மணி நேரத்துக்கு ரயில் வராது. மறு நாள் கேதாரம் வருவான். அவனிடம் ஒரு சிநேகிதர் வீட்டில் தங்கியிருப்பதாகச் சொல்ல வேண்டும் என்று அவர் தீர்மானித்தார்.

*    *    *

இன்று செவ்வாய்க்கிழமை, அவர் காலை ஏழரை மணிக்குப் பிளாட்பாரத்தில் உட்கார்ந்து கொண்டு பர்ஸைத் திறந்தார்.

அந்தப் பர்ஸ் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்தெட்டாம் ஆண்டில், ஒரு ஜெர்மன் கம்பெனி உதவி மானேஜரால் அவருக்கு (பல தடவை விடேறி நச்சரித்த பிறகு) கொடுக்கப்பட்டது. கறுகறுவென்று அந்தக் காலத்தில் இருந்த பர்ஸ், இப்போது மணம் இழந்து, பொலிவு இழந்து, பட்டன் இழந்து, தள்ளாடும் கிழவனைப் போலச் சுருங்கிக் கிடந்தது.

பெரிய பர்ஸ் !

அவருடைய ராசியோ அல்லது பர்ஸ் பிறந்த வேளையோ அதில் அவர் அந்தக் காலத்து ஓட்டைக் காலணாவையும் போட்டதில்லை; இந்தக் காலத்து விரல் இடுக்கு வழியாக நழுவும் பைசாவையும் போட்டதில்லை. பணம், ஷர்ட்டின் உள்பாக்கெட்டை விட்டு வெளியே வராது.

பர்ஸில் இருப்பவை, இதோ :

1. பெரிய பெரிய மனிதர்களின் பெயர்கள், விலாசங்கள்.
2. நாடக சபாக்களின் பெயர்கள், அவை சம்பந்தமாக யாரையெல்லாம் பார்க்க வேண்டும் என்ற குறிப்புக்கள்.
3. பெண்களுக்காக அவர் வாங்கி, பொருந்தாத, பொருந்தியும் பிரயோசனமில்லாத ஜாதகங்கள்.
4. தினசரி காலண்டரிலிருந்து கிழித்த தேதிகள், அவற்றின் பின்னால் அன்றாடச் செலவுக் கணக்கு.
5. ஒரு பெரிய நீலக் காகிதம். ஒரு பழைய லெட்ஜரிலிருந்து கிழிக்கப்பட்ட காகிதம். அதில் ஒரு நீண்ட பட்டியல். குத்தாலம் முதியோர் ஆசிரமத்தில் குடியேற்றப்பட்ட மகா புருஷர்களின் பெயர்கள், வயது, வந்து சேர்ந்த தேதி முதலான விவரங்கள்.
6. நான்கைந்து கல்யாணப் பத்திரிகைகள்.
7. அவருடைய புகைப்படம்.
8. வைத்தீசுவரன் கோயில் பிரசாதம்.
9. (பெரிய உறையில்) களிப்பாக்கு, வெற்றிலை, புகையிலை.

ஜம்புநாதன் மனத்துக்குள் சிரித்துக் கொண்டார். களிப் பாக்கை எடுத்து வாயில் போட்டுக் கொண்ட போது, மனத்தின் சந்தோஷம் புன்னகையாக அரும்பியது. கேதாரம் இனி மேல் தப்ப முடியாது. ஆதிசேஷனுக்கு அவனை ரொம்பவும் பிடித்துவிட்டது. அவருடைய பெண் அபிதம் கேதாரத்துக்கு மனைவியாகிவிடுவாள். அதன்பின் கேதாரம் ரயில்வேயில் தொடர்ந்து இருந்தாலும் சரி, வேலையை விட்டு விட்டு, மாமனாரின் கம்பெனியில் டைரக்டராகச் சேர்ந்தாலும் சரி. அவருக்கு ஒன்றுதான், கவலையில்லை. அவரைப் பொறுத்த வரையில் இந்தக் கல்யாணம் அவருக்கு ஒரு மகத்தான வெற்றி. ஒரு கல்லில் இரண்டு மாங்காய் அடிப்பவர்கள் சாதாரண மனிதர்கள். அவர் ஒரே கல்லில் ஒரு மரத்தையே வீழ்த்துகிறார். அவருடைய சம்பந்தி ஸ்தானம் உயருகிறது. ஆதிசேஷனுடைய பெயரில் ஆசிரமத்தில் ஒரு பெரிய ஹாலே எழப் போகிறது. பெண்களின் கல்யாணம் நடக்கப் போகிறது. கேதாரத்தை அவர் வளர்த்து ஆளாக்கியிருக்கிறார். அவருடைய பேச்சை அவன் ஆணையாகக் கருதி நடக்க வேண்டும். நல்ல பிள்ளை. நடப்பான். மறு நாள் புதன்கிழமையன்று, ஏற்பாட்டின்படி, கிராம்பட்டன் என்ஜினீயருடைய பெண்ணைப் பார்க்க வேண்டும். ஆனால் இப்போது அது அவசியமில்லாது போய் விட்டது. கேதாரம் ஆதிசேஷனுடைய மருமகனாக வரவேண்டும் என்று ஜம்புநாதனுடைய தலையிலேயே பிரும்மா எழுதின பிறகு, கேதாரம் எதற்காக மற்றப் பெண்களைப் பார்க்க வேண்டும்?

சிந்தனையில் ஊறிப் போன அவருக்குப் பொழுது போனதே தெரியவில்லை. எழுந்தார். கேதாரம் பம்பாய்க்கு, சனிக்கிழமையன்று புறப்பட ஏற்பாடாகியிருப்பது அவருக்குத் தெரியும். அந்தப் பிரயாணத்தை அவன் ரத்து செய்தாக வேண்டும். எப்படிச் செய்வது? பாஸ் அவன் கையில் இருக்கிறது. ரத்து செய்யக் குறித்து வைக்கச் சொன்னால், கவுண்டர் கிளார்க் ஒப்புக் கொள்வானா? பாஸை, அப்புறமாகக் கொண்டு வருகிறேன் என்று சொன்னால் போதாதா ?

மெதுவாக நடக்கும் போது, அவர் தம் மண்டையிலேயே ஒரு குட்டுக் குட்டிக் கொண்டார். என்ன ஞாபக மறதி! சே, இதற்கு ஏதாவது ஒரு மருந்து சாப்பிட வேண்டும் ! ஸ்டேஷன் சூப்பிரண்டு கணபதி இருக்கும் போது, அவர் எதற்காகக் கேவலம் கவுண்டர்

ஜோர்கின் தயவை எதிர்பார்க்க வேண்டும்? கணபதி அந்தக் காலத்து மனுஷன். ஒரு வார்த்தை சொன்னால் போதும், எஸ். எஸ். போனிலேயே கவுண்டருக்குத் தகவல் கொடுத்து விடுவார்.

எஸ். எஸ்.ஸின் அறையை அடையும் போதுதான், இந்தப் பிரயாண ரத்து அவ்வளவு பெரிய பிரச்னையா என்ற கேள்வி அவருள் உதித்தது.

கேதாரம் ஒரு ரயில்வே அதிகாரி. அதுவும் பெரிய அதிகாரி. சனிக்கிழமை பிரயாணத்தை ரத்து செய்ய அப்படி என்ன அவசரம்? இதனால் அவருக்கு என்ன லாபம் ?

திடீரென்று எண்ணத்தை அவர் கைவிட்டார். ஆனால் எஸ். எஸ்.ஸைப் பார்த்து, தம் வெற்றியைச் சொல்ல லாம் என நினைத்தார்.

அவருடைய அதிருஷ்டமோ, எஸ். எஸ். ஸின் போதாத வேளையோ, அறை யில் யாருமில்லை.

''நமஸ்காரம் கணபதி.''

''வாருங்கள்.''

''விஷயம் தெரியுமோ இல்லியோ?''

''சொல்லுங்கள்.''

''நம்ப மருமான் கேதாரம் இருக் கிறானே.....''

''உங்க மருமான்!''

''என் மருமான்தான். அவன் நேத்து ஆதிசேஷனுடைய பெண், அபிதத் தைப் பெண் பார்க்கப்போயிருந்தான்.''

''தெரியும்.''

''ஆதிக்கு ரொம்பப் பிடிச்சுட்டது.''

ஆதிசேஷன் வெறும் ஆதி ஆனதி லிருந்து, உறவு பிறந்துவிட்டது என்று புரிந்துகொண்டார் எஸ். எஸ்.

''சந்தோஷம். பெண்ணுக்கு?''

''அபிதத்துக்கு என் மருமானைப் பிடிக்காமல் இருக்க, அவன்கிட்டே என்ன குறை? அவளுக்குப் பிடித்திருக்க வில்லை என்றால் ஆதி வாயெல்லாம் பல் லாய் இருந்திருப்பாரா?''

''கேதாரம் பிடித்திருக்கிறது என்று சொன்னானா ?''

'' என் மருமான் எல்லிக்குமே ஓர் அழுத்தல். சின்ன வயசிலேயே அவன் தன் மனசில் என்ன இருக்குன்னு வாய் வார்த்தையாகச் சொல்லமாட் டான். ஆனால் என்கிட்டே வளர்ந்தவன் தானே, அவன் மனசிலே என்ன இருக்கு, என்ன இல்லேன்னு எனக்குத் தெரியும்...''

'' என்ன இருக்கு ?''

''கல்யாணம் பண்ணிக் கொள்ள லாம்னுதான்.''

''யாரை ?''

''இது என்ன, ஸ்கூல் வாத்தியார் மாதிரி! கணபதி. அவன் அந்தப் பெண் ணைத்தான் கல்யாணம் செய்து கொள் ளப் போகிறான்.''

தாம் வேறுவிதமாகக் கேள்விப்பட் டதை, ஜம்புநாதனிடம் சொல்லக் கண பதிக்குப் பைத்தியம் பிடிக்கவில்லை. மனுஷன் ஏதோ தில்லுமுல்லு செய்து, கேதாரத்தை மணையில் உட்கார வைக்கப் பார்க்கிறார் ,என்பது மட்டும் புரிந்தது.

''உங்களுக்கு எப்படி, அவன் மனசு தெரிஞ்சுது?'' என்று கேட்டார்.

''உள்ளூறப் பிடிச்சிருந்தால், உம்னு உர்ரென்று இருப்பான். இப்போ அப் படித்தான் இருக்கான்.''

''அப்படியா?''

''ஆமாம். பெண்ணு கொஞ்சம் குண்டுதான்.''

''கொஞ்சம்தானா?''

'' கொஞ்சம் அதிகம்னு வைத்துக் கொள்ளுங்களேன். என் கண்ணுக்கு ரொம்ப அதிகம்னு தெரியலே. இரண்டு குழந்தைகளைப் பெத்துட்டா? உடம்பு சரசரவென்று இறங்கிடும். அஞ்சு வருஷங்களுக்கு அப்புறம் பாருங்கள், பாந்தமாக இருப்பாள்.''

கணபதி கலகலவென்று வாய்விட்டுச் சிரித்தார். ஜம்புநாதனுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

''ஏன் சிரிக்கிறீர்கள்?''

''சாதாரணமா, ஒல்லியா ஒத்தை நாடியா இருக்கிற பெண்கள் கல் யாணம் ஆகி இரண்டு குழந்தை பிறந் தால் சதை ஏறி, வயிறு பெரிசாகிப் பாந்தமில்லாமல் போயிடறு... ஆனால் உங்க தியரிப் பிரகாரம்...''

'' நீங்க சொல்றது ரொம்ப சரி. ஆனால் இவள் இப்போ ரெட்டை நாடி... இனிமேல் பருத்துப் போக முடியாது.''

''அப்போ சரி... எதற்கும் இதை யெல்லாம் கேதாரத்திடமும் சொல்லி வையுங்கள். எஞ்ஜினீயர் அவன்.... உடம்பு விஷயம் தெரியாமல் இருக்கும். ஆதிசேஷன் என்ன செய்கிறார் கல்யா ணத்துக்கு ?''

''குபேரன் வீட்டிலே சீர் வரிசை பேசுவானா ?''

'' நான் அதைக் கேட்கவில்லை !''

''பின் ?''

''உங்க குத்தாலம் ஆசிரமத்துக்கு?''

''மொஸாய்க் புளோரிங்கிலே ஒரு பிரும்மாண்டமான ஹால்.''

''கல்யாணக் கூடமா?''

''அது மாதிரி. ஆனால் ஆசிரமம்.''

# சமையல் நேரத்தை மிச்சப் படுத்த இதோ ஒரு வழி!

TAMCON
TAMARIND
CONCENTRATE

# டாம்கான் திடீர் புளி

- டாம்கான் உபயோகியுங்கள்-இயற்கைப் புளியின் தூய்மையான சாரம்-உடனடியாக கலவை சேர்க்கும்.
- டாம்கான் மூன்றே செகண்டுகள் போதும்—சுத்தம் செய்து, ஊறவைத்து, பிழிந்து, வடிகட்ட 10 நிமிடங்கள்-ஏன் மேலேகூட ஆகும் கச்சாப்புளியைப் போன்றதல்ல.
- டாம்கான் மிகவும் சுத்தமானது, சுகாதாரமானது—தூசியில்லை, பூச்சிகளில்லை, கொட்டையெடுக்க வேண்டாம். நாருரிக்க வேண்டாம்.
- டாம்கான் இருந்தால்-உங்கள் விரல்களின் அழகைக் கெடுத்துக் கொள்ளவே வேண்டாம்.
- கறிகள், கூட்டுகள், சாம்பார், மிளகுத் தண்ணீர் முதலிய யாவற்றுக்கும் சுவையான புளிப்பைத் தருவது டாம்கான்.
- டாம்கான் மிக சிக்கனமானது-ஒரே தேக்கரண்டி-6 பேர்களுக்கான உணவுக்கு மணம் சேர்த்திடும்.
- 450 மற்றும் 225கிம்-புட்டிகளில் எல்லா கடைகளிலும் கிடைக்கிறது.



மங்களூரில் சமையல் வகுப்புக்கள் நடத்தி வரும் திருமதி அன்னம்பட்டா-பின்ட்டோ கூறுகிறார் ''என் சமையலுக்கு நாவில் நீரூறும் மணம் சேர்க்கிறது டாம்கான். ஒவ்வொரு இல்லத் தலைவிக்கும் நான் மனமுவந்து சிபாரிசு செய்வது டாம்கான்.''



தயாரிப்பவர்கள்
**ஃபுட் கான்ஸென்ட்ரேட்ஸ் (இந்தியா)**
B–10, இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், பெங்களூர்-10

Interpub FCI 3A TAM

''மொஸாய்க் ஆசிரமம். அதிலே கிழங்கள் படுத்துண்டா, முதுகுத் தண்டு உபயோகமில்லாமப் போயிடும். ஜாக்கிரதை.''

''உங்களுக்குக் கேலியாக இருக்கு.'' ஜம்புநாதன் எழுந்தார்.

''கோபித்துக் கொள்ளாதீர்கள்.... சும்மா வேடிக்கைக்குச் சொன்னேன். உங்க ஜாகை வசதியா இருக்கா ?''

ஜம்புநாதனுக்குச் 'சுருக்'கென்று ஆகி விட்டது.

'''மருமகனோடு தங்கலாமே?'' என்றார் எஸ். எஸ்.

''தங்கலாம். ஆனால்....''

''ஒண்ணும் பிளாட்பாரம் பழகிப் போயிடுத்தாக்கும்.''

ஜம்புநாதனால் பேச முடியவில்லை.

'' மிஸ்டர் கணபதி....'' என்று இழுத்துப் பார்த்தார்.

''ஜம்புநாதன்.... உங்களை எனக்கு எத்தனை வருஷங்களாகத் தெரியும்னு நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. உங்க மனைவி பரம சாது. இரண்டு பெண்களை உமக்குக் கொடுத்திருக்கிறான். உங்க மருமான் ஆயிரம் ரூபாய் சம்பாதிக்கிறான். நீங்களெல்லாம், பொது இடங்களில், ஹோட்டல் அறைக்கு ஆகிற இரண்டு ரூபாய் மூன்று ரூபாயை மிச்சப்படுத்த இப்படித் தங்கலாமா? கேதாரத்துக்குத் தெரிஞ்சா, அவன் குன்றிப் போகமாட்டான் ?''

''நான் வரேன்.''

''கேதாரத்துக்குப் போன் பண்ணிச் சொல்லட்டுமா ?''

''சொல்லுங்கள்.''

''ஆதிசேஷனுக்கும் உங்க விலாசத்தைக் கொடுக்கிறேன். கேர் ஆப் பிளாட்பாரம், நம்பர் ஒன்.... சென்ட்ரல் ஸ்டேஷன், மெட்ராஸ்—3 என்று ! சரியா ?''

''கணபதி !'' ஜம்புநாதன் உடல். வியர்க்க நாற்காலியில் பொத்தென்று உட்கார்ந்தார். ''ஏன் என்னை இப்படி வதைக்கிறீர்கள்? நான் என்ன தப்பு செய்தேன் ?''

''ஒரு நல்ல உத்தியோகத்தில் இருக்கிற சின்ன வயசுப் பிள்ளையை— அவனைப் படிக்க வைத்தோம் என்கிற காரணத்துக்காக — உங்க சொந்த நலனை உத்தேசித்து, பணத்துக்காகப் பணயம் வைக்கிறீர்களே! இதைவிட என்ன பெரிய தப்பு நீங்கள் செய்யணும் ?'' என்றார்.

ஜம்புநாதன் எழுந்தார்.

''நானும் பிழைக்கணும், கணபதி! நானும் பிழைக்கணும். மலை மலையா இரண்டு பெண்களைப் பெத்து வைச்சிருக்கேன். அதுகளை இரண்டு பேர் கையிலே பிடிச்சுக் கொடுக்கணும். நியாயம், தர்மம், பாபம், புண்ணியம்' எல்லாம் பார்த்தால் நான் என்னிக்கும் என் குடும்பத்தோடே, ஒண்ணும் நம்பர் பிளாட்பாரத்தில் ஜன்மத்தைக் கழிக்க வேண்டியதுதான்....! நான் வரேன்!''

எஸ். எஸ். ஒரு நீண்ட பெருமூச்சுடன் ஜம்புநாதன் வெளியேறுவதையே பார்த்தவராய் உட்கார்ந்திருந்தார்.

(தொடரும்)

## காரை ரிப்பேர் செய்யப் புதுமை சாதனம்



மோட்டார் காரின் கீழே, கியர் பாக்ஸ் ஆகியவற்றில் கோளாறு ஏற்பட்டால் படுத்துக்கொண்டோ, அண்ணாந்து பார்த்தோ பழுது பார்க்காமல் வசதியாக நின்றுகொண்டே பழுது பார்ப்பதற்கு ஏற்ற சாதனத்தை, ஜெர்மன் கூட்டாட்சிக் குடியரசின் இரு பொறியியல் நிபுணர்கள் உருவாக்கியுள்ளனர். இதன்மீது காரை ஏற்றிவிட்டால் 90 டிகிரி கோணம் வரை காரைச் சாய்க்க முடியும். ஊழியர்கள் நின்று கொண்டோ அல்லது உட்கார்ந்து கொண்டோ முன்னைவிட விரைவாகப் பழுது பார்க்கலாம். களைப்பு ஏற்படாது. (பு.பி.எஸ்.)

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

## அதிக விற்பனைப் புத்தகம்!

பிலிப்பைன் நாட்டில் உள்ள (ஏழாயிரம்) தீவுகளில் ஒருவருக்கொருவர் தொடர்பு கொள்ள டெலிபோன் வசதி நிறைய உண்டு. இங்கே டெலிபோன் செலவு மலிவு. ஆனால் புத்தகப் பழக்கம் குறைவு. அதனின் விலையும் அதிகம். ஆகவே, மிக அதிகமாக இங்கே விற்பனையாகும் ஒரே புத்தகம் டெலிபோன் டைரக்டரிதான்! - பு. எஸ். வி.

# நாளைக்கான இன்றைய அன்பளிப்பு





## க்ளிக் III காமிரா

சில்லறை விலை ரூ. 56.25

எக்ஸைஸ் ட்யூடியுடன்; பிற வரிகள் தனி.

**தொடங்கவும், தொடர்ந்து படமெடுக்கவும் தலைசிறந்தது!**

உங்கள் குழந்தைக்கு புகைப்படக் கலையை அறிமுகம் செய்து வையுங்கள்—க்ளிக் III காமிரா வாங்கித் தாருங்கள். அதைக் கையாளுவது எளிது. எதையும் அட்ஜஸ்ட் செய்யவேண்டிய அவசியமில்லை. குறி பார்த்து க்ளிக் செய்தால் போதும். இது சிக்கனமானது. ஒவ்வொரு 120 ரோல் பிலிமிலும் 12 பிரகாசமான—வர்ண அல்லது பிளாக் அண்ட் ஒயிட் படங்கள் எடுக்கலாம்.

அங்கீகாரம் பெற்ற எல்லா ஆக்பா-கேவார்ட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கின்றன. ஆக்பா-கேவார்ட் ஏ.ஜி. லெவர்குஸன் கூட்டுறவுடன் தயாரிப்போர்: நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்., பரோடா.

® இது போட்டோகிராபி பொருள்களைத் தயாரிக்கும் ஆக்பா-கேவார்ட் ஆண்ட்வர்ப்-லெவர்குஸன் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்.



ஏகபோக விநியோகஸ்தர்கள்:

**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**

பம்பாய், புது டில்லி, கல்கத்தா, சென்னை.

**ஆக்பா க்ளிக்—இந்தியாவின் மிகப் பிரபல காமிரா.**

CMAG-145-103 TAM

# தீபாவளி ஸ்பெஷல்!



‘குதிரை கீழேயும் தள்ளிக் குழியையும் பறித்ததாம்’ என்று அவப் பெயர் குதிரைக்கு உண்டு. ஆனால் குதிரை ஆடி ஓடி விளையாடிக் கோப்பைகளைப் போலோ ஆட்டத்தில் குவித்துத் தந்ததைப் போலோ மைதானத்தில் கண்டோம்.

பரங்கிமலை நம்பியார் மைதானம். தடுக்கி விழுந்தால் ஒரு மேஜரோடோ, காப்டனோடோ மோதிக் கொள்ளும் நிலை.

“குதிரையும் நல்லா ஓடணும், மனுசனும் நல்லா ஆடணும்!” என்கிறார் போலோ ரசிகர்.

“இன்றைக்கு மாமனாரும் மாப்பிள்ளையும் ஒரு கோஷ்டியில் ஆடுகிறார்கள். தீபாவளி ஸ்பெஷல்!”

“மாமனார் ஓய்வுபெற்ற ஜெனரல் குமாரமங்கலம். அவரது மாப்பிள்ளை மேஜர் ஜோதி. இருவரும் ‘காவல்ரி’ குழுவுக்காகச் சேர்ந்து ஆடுகிறார்கள். எதிர்த்த கோஷ்டியில் சென்னை போலோ விளையாட்டுக் கழகத்துக்காக ஏ. வி. முத்தையா, மேஜர் வி. பி. சிங், மேஜர் சுகாக் இருக்கிறார்கள். இன்று ஆட்டம் ‘திரில்லிங்’காக இருக்கும்!”

**முதல் சக்கர்:** பியூகில் ஊதுகிறது. நடுவர் பந்து வீச முதல் சக்கர் தொடங்குகிறது. சக்கர வட்டமாகப் பந்தைத் தொடர்ந்து குதிரைகள் பாய்கின்றன. பந்தோடு பாயும் எதிர்த்த கோஷ்டிக்குக் குறுக்கே ஜெனரல் குமாரமங்கலம் பாய்ந்ததால் விசில் அலறுகிறது. ‘பெனல்’ வழங்கப்படவே, முப்பது கஜ தூரத்துக்கப்பாலிருந்து திறமை மிக்க போலோ ஆட்டக்காரர் வி. பி. சிங் அதைக் கோலாக்குகிறார். சிவப்புக் கொடி தூக்கப்படுகிறது. ஏழரை நிமிஷங்கள் வேகமாக ஓடி மறைகின்றன.

**இரண்டாம் சக்கர்:** குதிரைக் கோஷ்டிகள் இடம் மாறுகின்றன. இரண்டாம் சக்கரில், தொடங்கியதுமே காப்டன் ஷெர்கில் வாயுவேகமாகக் கோல் முகத்துக்குள் பந்தைச் செலுத்தி ‘சபாஷ்’ பெறுகிறார். மேஜர் வி. பி. சிங் எதிர்த்த கோஷ்டியைப் பிளந்து மூன்றாவது கோலை உறுதிப்படுத்துகிறார். நான்காவது கோலை அடித்துப் பெருமையுற்றவர் ஏ. வி. முத்தையா. காவல்ரி கோஷ்டியில் சூடு பிறந்து மாப்பிள்ளை ஜோதி இரண்டு கோல்களை அபாரமாக அடிப் போட்டுப் பாராட்டுதல்களைப் பெறுகிறார். ஆட்டத்தில் விறுவிறுப்பு ஏறுகிறது.

பாம்பொன்று போலோ ரசிகர்களின் மத்தியில் தோன்றிச் சலசலப்பை உண்டாக்குகிறது. ‘பாம்பென்றால் படையும் நடுங்கும்’ என்பார்கள். ஒரு சிப்பாய் பாய்ந்து மிதித்துப் பிடித்துக் கையிலேந்திச் சென்றுவிடுகிறார். எல்லாப் புறங்களிலும் விஷப் பாம்பொன்று தலைநீட்டி யிருக்கிறதே!

**மூன்றாம் சக்கர்:** இந்தச் சக்கரில் ஜெனரல்குமாரமங்கலம் சாடிப் பாய்ந்து பெருமுயற்சி செய்தும் கோல் அடிக்கும் சான்ஸை இழக்கிறார். மேஜர் வி. பி. சிங் வைச்சது வரிசை. அடுத்து அவருக்கே ‘கோல்’ அடிக்கும் பெருமை கிட்டுகிறது.

**நான்காவது சக்கர்:** மேஜர் சுகாக்கும் தம் பங்குக்கு ஒரு கோல் போட்டுச் சென்னை போலோ விளையாட்டுக் கழகத்தின் வெற்றியை உறுதியாக்குகிறார். மாப்பிள்ளை ஜோதி ‘ஹாட்ரிக்’ அடித்தும், மாமனாரும் மாப்பிள்ளையும் ‘ரன்னர்’ பெருமையையே அடைகிறார்கள். ஸ்ரீமதி குமாரமங்கலம், சென்னை போலோ சங்கக் காப்டன் ஏ. வி. முத்தையாவுக்குத் தங்கக் கோப்பையைத் தருகிறார். மாப்பிள்ளை ஜோதியை முன்னும் அனுப்பி



மாமனார் குமாரமங்கலம் எல்லோருக்கும் கடைசியாக வந்து ஸ்ரீமதி குமாரமங்கலம் அவர்களிடம் பரிசு பெறும்போது கரகோஷம் அதிகமாகிறது.

தீபாவளியன்று ஜெனரல் குமாரமங்கலம் குடும்பத்தினரிடம் “கங்கா ஸ்நானம் ஆச்சா?” என்று கேட்டால், “மாப்பிள்ளையும் மாமனாரும் போலோ ஆட்டத்தில் வியர்வையில் குளிச்சாச்சு!” என்று அவர்கள் சொல்லியிருந்தால் வியப்பில்லை. — பி. எஸ். மணி



''இமம் மே வருண ஸ்ருதீஹவம்
அத்யாச ம்ருடய....!''

குளத்தின் படிக்கட்டுகளில் நின்றுகொண்டிருந்த சாமாவின் வாய் மந்திரங்களை முணுமுணுத்துக் கொண்டிருந்தது. மாலை நேரம்; மலரை அள்ளித் தெளித்தது போல் குளக் கரையில் வெள்ளை வெளேர் என்று மேல் வஸ்திரம் பளிச்சிட, சாஸ்திரிகள் பலர் காயத்ரி ஜபித்துக் கொண்டிருந்தனர். பட்டை, பட்டையாகப் போடப்பட்டிருந்த விபூதி உலர்ந்து ஒவ்வொரு முகத்திலும் பளிச்சிட்டது.

''ஏய், நம்ம ராமகிருஷ்ணன் வீட்டிலே நாளைக்குப் பூணூல். நம்ம சுந்தரத்தை அழைச்சிண்டு நீ போயிட்டு வாடா, தெண்டு'' — ஒரு கனபாடிகளின் கரகரத்த குரல்.

''எந்த ராமகிருஷ்ணன் மாமா?''

''அதாண்டா ராமசாமி ரோட்டிலே ஆறும் நெம்பர் பங்களா. கட்டாயமா அனுப்பறதா சொல்லியிருக்கேன். காலம்பற ஆறு மணிக்கே போயிடணும். பெரிய இடம். எல்லாத்தையும் சௌகரியமாச் செஞ்சு வைச்சுட்டு, கொடுத்ததை வாங்கிண்டு வரணும். பெரிய மனுஷாள், ஜாக்கிரதை. அப்புறம் நாளைக்குச் சாயங்காலம் இதே இடத்திலே என்னை வந்து பார்.''

''சரி மாமா!'' — தெண்டுவின் தலை பலமாக ஆடுகிறது.

சாமாவின் கவனம் முழுவதும் மந்திரத்தில் இல்லை. கனபாடிகளின் கடூமான குரல் இன்னும் அவர் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தது.

''ராமசாமி ரோட்டில் ஆறும் நெம்பர் பங்களா, ராமகிருஷ்ணன்''—சாமாவின் வாய் முணுமுணுத்தது.

கடவுளே! இதென்ன சோதனை? எந்த பந்தபாசங்களிலிருந்து விடுபட்டுத் தேசாந்திரியாக மாறி, ஊர் ஊராக வேளைக்கு ஓர் இடமாக இந்த நாடு முழுதும் சுற்றி வந்து கொண்டிருந்தாரோ, அந்த விரக்தி மனப் போக்குக்கு வித்தை ஊன்றியதே இந்த ராமகிருஷ்ணன் குடும்பம்தானே?

''ஏய், ஜாக்கிரதை! பெரிய இடம்.''—கனபாடிகள் தெண்டுவிடம் கூறியது இன்னமும்தான் சாமாவின் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தது. ஒரு வேதனைப் புன்னகை தவழ்ந்தது அவர் இதழ்களில். அந்தப் பெரிய இடத்தின் சாக்ஷாத் சம்பந்திதான் — இதோ தேசாந்திரியாக, குளக்கரையில் நின்றுகொண்டிருந்தார்! அப்படியென்றால், மறுநாள் அவருடைய பேரனுக்கு அல்லவா பூணூல்?

வாய் வேகமாக மீதி மந்திரங்களை ஜபித்துத் தள்ளுகிறது. சிந்தனைக்கு மேடையாகக் குளக் கரையில் ஓர் இடத்தைத் தேடி அமர்கிறார், சாமா. பேரனைப் பற்றிய இன்ப நினைவுகளில் மனம் லயிக்கிறது.

பேரன், பிறகு அவர் மகள் மங்களம், மங்களத்தை அவர்கள் வீட்டில் சம்பந்தம் செய்தது, மாப்பிள்ளை ராமச்சந்திரன் படிப்பு, பெருந்தன்மை, அதிலிருந்து பெரிய இடத்துச் சம்பந்தி ராமகிருஷ்ணனின் குணாதிசயங்கள்—சுமார் பத்து, பன்னிரண்டு வருஷச் சம்பவங்களெல்லாம் வரிசையாக நினைவுக்கு வந்தன. இவ்வளவு பெரிய இடம் தனக்குக் கிடைத்த அதிர்ஷ்டத்தை, எவ்வளவு நாட்கள் தமக்குத் தாமே பாராட்டிக் கொண்டிருக்கிறார் தெரியுமா?

சந்தியாவந்தனம் முடிந்தவுடன் எல்லா சாஸ்திரிகளும் கிளம்புகின்றனர். சலனமற்று இருந்த குளத்து நீரில் எங்கிருந்தோ வந்து விழுந்த சிறு கல் ஒன்று, நீர் வளையங்களை உருவாக்குகிறது.

பரந்து செல்லும் எண்ணச் சுழலில் சிக்கித் தவிக்கிறார் சாமா. முப்பது வருஷங்கள்



உழைத்து, உருக்குலைந்து சிறிதளவு சேமிப்புடன் அலுவலக வாழ்க்கையிலிருந்து விடுபட்டு, ஆன்மிக வாழ்க்கையை விரும்பி ஏற்ற சாமாவுக்குத் தாயில்லாப் பெண்ணான மங்களத்தைப் பொறுப்பாக ஓரிடத்தில் ஒப்படைக்க இறைவிடத் தகுதியான இடம் தோன்றவில்லை அன்று.

சம்பந்தியின் தகுதிக்கு ஏற்பச் சக்திக்கு மீறியே செலவழித்துத் திருமணத்தை நடத்தி, பெண்ணையும் புருஷன் வீட்டுக்கு அனுப்பிய சாமா, கடமையை ஆற்றிவிட்ட பெருமிதத்துடன் வீடு வந்து கொண்டிருந்த நாட்கள் அவை.

வாரம் ஒரு முறை, கை நிறைய மலர்ச் சரத்துடன் மகளைப் பார்க்கச் சென்றவர், மாதம் ஒரு முறை போக ஆரம்பித்தார். அதுவே மூன்று மாதங்களுக்கு ஒரு முறையாக மாறியபோதுதான் மங்களம் மிகவும் மனம் வருந்தினாள்.

''அப்பா! ஏம்ப்பா இப்போ எல்லாம் அடிக்கடி வருவதில்லே? ஏம்பா உனக்குக் கஷ்டமா இருக்காப்பா? அம்மா இல்லாத குறையை உன்னைப் பார்த்துத்தான் அப்பா சமாதானம் செஞ்சுக்கிறேன். நீ தனியா திண்டாடறதை நெனச்சா, எனக்கு இரவில் தூக்கமே வர மாட்டேங்கறதுப்பா. எனக்காக, என் மன நிம்மதிக்காக நீ அடிக்கடி வரணும்பா. இல்லாவிட்டால் நானாவது வந்து பத்து நாட்கள் உனக்குச் சமைச்சுப் போடப் போகிறேன்''— மெல்லச் சிரித்துக் கொள்கிறார் சாமா. பாசத்தின் பிடிப்பில் வகையாகச் சிக்கிக் கொண்டிருந்த சமயங்கள் அவை.

''மங்களம், நீ அறியாத பெண். என்னைப் பத்தி நினைக்கும் நேரத்தில் உன் குடும்பத்தைப் பற்றி நினை. வீட்டில் பெரியவர்கள் மனம் கோணாமல் நடந்து கொள். நீ அவர்களிடம் நல்ல பெயர் வாங்குகிறாய் என்று என் காதுகளில் மூன்று மாதங்களுக்கு ஒரு முறை விழுந்தாலே போதும், எனக்கு உடம்பில் தெம்பு ஏற்பட்டு விடும்.'' என்றே அவர் கூறிய வார்த்தைகள்.

அடுத்து மங்களத்திடமிருந்து வந்த கடிதங்கள். சில தடுமாற்றத்தோடு எழுதப்பட்டவை. சொந்தத் தந்தையிடம் அறிவிக்க வேண்டும் என்று ஓர் ஆர்வம்; ஆனால் எழுதலாமோ கூடாதோ என்ற தயக்கத்துடன் எழுதப்பட்டவை. நாளொரு மேனி பெருகி வரும் அவர்கள் செல்வாக்குக்கு ஏற்ப நல்ல இடத்தில் சம்பந்தம் செய்திருக்கலாம் என்ற எண்ணம் எப்படியோ சம்பந்தி அம்மாள் மனத்தில் விழுந்திருக்க வேண்டும். படிப்படியாக, மங்களத்தின் ஒவ்வொரு செய்கையிலும் குறை காண ஆரம்பிக்கிறாள் — மங்களத்தைச் சொல்லிக் குற்றமில்லை. மனத்திலுள்ள குறைகளை, பிறந்த வீட்டில் தானே கூறி ஆறுதல் பெற முடியும்? தாயாரிடம் கூற வேண்டியவை. தந்தையைத் தாய் ஸ்தானத்தில் வைத்து எழுதினாளோ என்னவோ? எப்படியிருந்தால் என்ன அவர் தாய் அல்லவே, மகளின் தாபத்தைப் புரிந்து கொள்ள. ஒரு தந்தையின் நிலையில், எல்லாமே வெறும் பிதற்றலாகத்தான் பட்டது அவருக்கு. வந்த அவ்வளவு கடிதங்களையும் சுக்குநூறாகக் கிழித்தெறிந்து விடுகிறார்.

அடுத்துச் சில மாதங்கள் போக்குவரத்தே கிடையாது. பாழும் மனம் கேட்கிறதா? நீண்ட நாள் இடைவெளிக்குப் பிறகு மகள் வீட்டை நோக்கி அவர் கால்கள் நடந்து கொண்டிருக்கின்றன. பங்களாவின் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே படியேறி விடுகிறார் அவர்.

உள்ளே ஹாலில் இருந்து வெளியே வந்த வார்த்தைகள் தெள்ளத் தெளிவாக அவர் காதுகளில் விழுகின்றன.



# பால் பாயசம்

மயிலை மூர்த்தி

''ஏய், பிச்சைக்கார சனியன். போயும், போயும் இந்த வீட்டுக்கு வந்து சேர்ந்தாய் பார். ஒரு நாள், கிழமை, சீர் செனத்தி — எதுவும் கிடையாது. நின்றால் நெடுஞ் சுவர். விழுந்தால் குட்டிச் சுவர். இந்த லட்சணத்தில் 'பான்' காற்று வேண்டியிருக்காக்கும். ஏண்டி, உங்க பிறந்த பங்களாவிலே 'பான்' காற்றிலேதான் வளர்ந்தாயா ?

'' இந்த லட்சணத்தில் பிறந்த வீட்டிலிருந்து பார்க்க வரலேன்னு புலம்பல் வேறே; வந்து விட்டால்தான் என்ன? சம்பந்தி பெரிய ஜட்ஜ் தட்டுக் கெட்டுப் போகிறது. அந்தக் கிழம் ஒரு வேளை சோற்றுக்கு எங்கெல்லாம் சுத்தறதோ? அழகான கல்யாணம் பண்ணி விட்டாரே. என்னவோ எங்கள் தலையெழுத்து. ஒரு தரித்திரச் சனியனும் இங்கே வரவேண்டாம்.''

என்ன நாராசமான வார்த்தைகள் ! ஆயிரம் தேள்கள் கொட்டும் கடுப்பு, சம்மட்டிகள் தாக்கும் கனம். அவர் தலை சுழலுகிறது. இதற்காகவா இவ்வளவு பாடு பட்டார் ? வாழ்நாளில் எவ்வளவு பெரிய தவறு செய்து விட்டார் அவர். தம்முடைய தரத்துக்கு, நிலைக்கு மீறி, பெரிய இடத்தை நாடியது அவர் செய்த தப்புத்தானே !

இனிமேல் இந்த வீட்டில் காலடி எடுத்து வைக்கக் கூடாது. காலம் மாறும். ஆனால் வார்த்தைகள். அவை அவ்வளவு சீக்கிரத்தில் மறக்கக் கூடியவையா? கோபத்தினால் உடலே தள்ளாடுகிறது. ஆனால் அவர் கோபம் யாரை என்ன செய்ய முடியும்? வந்த சுவடு தெரியாமல் திரும்பிவிடுகிறார் சாமா.

அன்று புறப்பட்டவர்தான்; வடக்குக் கோடியில் உள்ள ரிஷிகேசம் அடைக்கலம் அளிக்கிறது. அங்கும் நிம்மதியில்லை. அவர் எங்கு சென்றாலும், அவருடைய மனம், அவருடன்தானே வந்தது ! துயரத்தைத் தாங்கிய மனத்துடன் அவர் எங்குதான் ஓடி ஒளிய முடியும்? அந்த வேகத்துக்கு வரம்பு பத்து, பன்னிரண்டு வருஷங்கள். இதோ மறுபடியும் புறப்பட்ட இடத்துக்கே வந்திருக்கிறார் தேசாந்திரியாக. உருவத்திலே பெருமளவு மாறுதல். வெண்ணிறத் தாடி வேறு. வற்றிய உடல். கையிருப்பும் வற்றிய நிலை. ஆனால் மனத்தின் அடித்தளத்தில் மட்டும் அந்தப் பாச ஊற்று வற்றிவிடவில்லை என்பது தான் அவருடைய வருகைக்குப் பொருள். அவருடைய பேரனுக்கு அல்லவா பூணூல்?

அவர் பந்த -பாசங்களிலிருந்து விடுபட்டு விலகி, விலகிச் சென்ற இவ்வளவு வருஷங்களில், அவருடைய ஒரே மகள், பெண்களுக்கே இயல்பான பொறுமையுடன், ஒரு மகனுக்குத் தாயாகி, இதோ மறு நாள் அவனுக்குப் பூணூலும் போடப் போகிறாள். இந்தச் சமயத்தில் அவரையும் அந்த ஊருக்கு அழைத்து வந்திருக்கிறதே விதி. அதை என்னவென்று சொல்வது !

'விருட்'டென்று எழுந்த சாமா, கைப் பையைத் திறந்து அதிலிருந்த ஒரு காகிதப் பொட்டலத்தைப் பிரித்து எண்ணினார். இனி இருக்கப் போகிற நாட்கள் சொற்பம்தான் என்பதை அறிவிப்பது போல் அவருடைய சேமிப்பும் குறைந்து கொண்டே வந்திருந்தது.

குளக்கரையிலிருந்து புறப்பட்டவர் கடைத் தெருவுக்குள் நுழைந்தார். மாப்பிள்ளைக்கு ஒரு ஜோடி ஜரிகை வேஷ்டிகள், பெண்ணுக்கு ஒரு புடவை, பூணூல்காரப் பையனுக்கு ஒரு பட்டு — இவை அடங்கிய மூட்டையுடன் இருப்பிடமான சத்திரத்துக்குத் திரும்பிய சாமா, மறு நாள் செய்ய வேண்டியவைகளை மனத்துக்குள் வரிசைப்படுத்தியவாறே நித்திரையில் ஆழ்ந்து விட்டார்.

மறு நாள் காலை; ராமசாமி ரோடு, ஆறும் நம்பர் பங்களா கோலாகலமாகக் காட்சியளிக்கிறது. நாதசுர இசை எங்கும் பரவி, பரபரப்பை ஊட்டுகிறது. கையிலே துணி மூட்டை; மனத்திலோ தாங்க முடியாத சுமையுடன் உள்ளே நுழைகிறார் சாமா. நாலு பேரைப் போல் அவரும் முன்னணியில் நின்று பங்கு கொள்ள வேண்டிய உரிமை இருந்தது. ஆனால் பயன்? மெலிந்த அவர் சரீரம், முகத்தை மறைத்த மீசை தாடி, பத்துவருஷங்களில் ஏற்பட்ட வயதின் ஏற்றம், தள்ளாமை — இவையெல்லாம் நிச்சயம் அவரைக் காட்டிக் கொடுக்காது. அவரும் அதைத் தானே விரும்பினார். கூட்டம் நிரம்பி வழிந்தது. தட்டுத் தடுமாறியவர் மெல்ல மேடையை உற்று நோக்குகிறார். அதோ, மங்களம் அவருடைய அருமை மகள், கணவன் அருகில் நின்று கொண்டிருக்கிறாள். அருகில் அமர்ந்துள்ள பேரனைக் கவனிக்கிறார். கண்கள் குளமாகின்றன. ''என் ராஜா, எவ்வளவு அழகா இருக்கான்.'' மனத்தில் எழுந்த ஆர்வத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் இன்னும் சற்று அருகில் செல்கிறார். மனத்தில் ஓர் அசுர குணம் தலைதூக்குகிறது. சீ, சீ! எல்லாம் மாயையின் சொரூபங்கள். இருக்க வேண்டிய நிலையில் இருந்தால்தான் எதற்கும் மதிப்பு, உரிமை.... பெண், மருமகன், பேரன், சம்பந்தம், உறவு — இதையெல்லாம் தான் என்றோ உதறி மனத்தைப் பாறையாக்கிக் கொண்டு விட்டாரே அவர். பிறகு எதற்காக இங்கே வந்தார்? கையில் எதற்காக அந்தத் துணி மூட்டை ? — அதை எங்கேயாவது இறக்கி வைத்தால்தான் அவர் மனம் நிம்மதியடையும். கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே நுழைந்தவர் வராந்தாவைக் கடந்து வீட்டுக்குள் நுழைகிறார். வாசற் பக்கத்தில் ஒரு விசாலமான அறை. மாப்பிள்ளையின் அறையாகத்தான் இருக்க வேண்டும். இதோ அறையின் சுவரில் சம்பந்தியின் பெரிய படம் ஒன்று தொங்குகிறதே. அறையில் யாரும் இல்லை. மெதுவாக உள்ளே நுழைந்தவர், அறையின் நடுவில் போடப்பட்டிருந்த பெரிய மேஜையின் மீது தம்மிடமிருந்த துணி மூட்டையை வைத்தவர், சுற்றிலும் ஒருமுறை பார்த்தார். நல்ல வேளை, அவரை ஒருவரும் கவனிக்கவில்லை. யாரோ ஆள் அரவம் கேட்டவர் சட்டென்று அறைக்கு வெளியே வந்து கும்பலில் கலந்து விடுகிறார். மங்களம்தான் அந்த அறைக்குள் நுழைகிறாள். அலமாரியைத் திறந்து தான் தேடி வந்த பொருளை எடுத்துக் கொண்டவள் திரும்பி விடுகிறாள். கூட்டத்தில் அவர் மீது உராய்வது போல்தான் செல்கிறாள். ஏன், அவர் கண்களும், அவளுடைய கண்களும்

# 50 காசு மிச்சம்!

60 காசு மதிப்புள்ள
அழகான டப்பா
உங்களுக்கு
10 காசுக்கு
கிடைக்கிறது.

Cadbury's
Bournvita
BARGAIN OFFER!
ideal food drink
strength and vigour
450g net

ஒவ்வொரு போர்ன்விடா
டின்னிற்குள்ளும் அடங்கிய
இந்த உபயோகமுள்ள பிளாஸ்டிக்
(போலிஸ்டைரீன்) டப்பாவை இன்றே
வாங்குங்கள். இதில் மிளகு, சீரகம் போன்ற
பொருள்கள் கெடாமல் வைத்திருக்கலாம்.

**ஸ்டாக் தீரும் முன்பு முந்துங்கள்.**

ஒவ்வொரு டின்னிலும் உள்ள போர்ன்விடாவின்
அளவு வழக்கம் போல் 450 கிராம்.

**இந்த பிளாஸ்டிக் டப்பா
800 கிராம் டின்னிற்குள்ளும்
கிடைக்கிறது.**

**சக்திக்கும் வலிமைக்கும் மற்றும் நீடிக்கவைக்கும் *கேட்பரிஸ்* போர்ன்விடா!**

கூடத்தான் ஒரு முறை சந்தித்துக் கொண்டன.

''மங்களம், இதோ பார்; உன் அப்பா உன் அருகிலேயே இருக்கிறேன். மங்களம், காலச் சக்கரத்தின் சுழலிலே, ஏற்றத் தாழ்வுகள், பெருமைகள், போட்டிகள், ஏமாற்றங்கள் — எல்லாமே மாறிவிடுகின்றன. உன்னைப் படுத்தியவர்களை நீ அனுசரித்து வென்று விட்டாய். எந்தப் பெண்ணுக்கும் தேவையான ஒரு பண்பு அது. ஒரு பக்கம் பெருமைப்படுகிறேன். ஆனால் என்னால் அவ்வளவு சீக்கிரம் உன் நிலைக்கு வர முடியாது. அதற்கென்ன செய்வது? என் போக்கு அப்படி. வார்த்தை தாங்கமாட்டேன். மங்களம், இங்கே வா, உன்னை ஆசை தீர, கண் குளிர ஒரு முறை பார்த்துவிட்டுப் போகிறேன். இனி மேல் இந்த உலகில் எந்த ஆசையும் கிடையாது. வா, மங்களம்.'' — இவ்வளவும் வெளியே சொல்ல முடியாத நிலையில், மௌனமாகக் கண்ணீர்தான் வெளிப்பட்டுப் பார்வையை மறைக்கிறது. வாசற் பக்கம் வந்து மேடைக்கு அருகில் சாஸ்திரிகள் பக்கத்தில் வந்து அமர்ந்து கொள்கிறார் சாமா.

பிரம்மோபதேசம் நடக்கிறது. தம்மைச் சுற்றி ஒரு பட்டுத் துணியைப் போர்த்திக் கொண்டு அதனுள் மங்களம். மாப்பிள்ளை, சாஸ்திரிகள் சேர்ந்து செய்யும் பிரம்மோபதேசத்தின் அழகைக் கண் குளிரக் கண்டு ரசிக்கிறார் அவர். தொடர்ந்து மங்களத்தின் கண்கள் மட்டும் கலங்கியிருப்பதைக் கவனிக்கத் தவறவில்லை அவர் கண்கள். பாவம், பேதைப் பெண் எதையோ நினைத்து வருந்துகிறாள். இந்தச் சமயத்தில் தன்னுடைய மனிதர்கள் என்று கூறிக்கொள்ள ஒரே உறவினரான தகப்பனார்கூட அருகில் இல்லையே என்று ஏங்குகிறாளோ என்னவோ? 'கவலைப்படாதே, மங்களம் இதோ உன் அப்பா, உன் எதிரிலேயே அமர்ந்திருக்கிறேன்' என்று கூறத் துடிக்கிறது அவர் மனம். கூடவே சற்றுத் தூரத்தில் அமர்ந்திருந்த சம்பந்தி அம்மாள் அவர் கண்களில் தென்படுகிறாள். வேதனை மனத்துக்குள்ளே கரைந்து போய் விடுகிறது.

ஆயிற்று; உள்ளே முதல் பந்தி சாப்பாட்டுக்கு இலை போட்ட செய்தி மெல்ல மெல்லப் பரவி மேடைக்கு வந்து விடுகிறது. அங்கிருந்த கூட்டத்தில் சிறு சலனம். கூட்டம் சாப்பாட்டுக்காக உள்ளே நகருகிறது. சாமாவும் கூட்டத்தோடு கூட்டமாகச் சாப்பாட்டுக்கு விரைகிறார்.

'' ஆபீஸுக்குப் போகிறவர்கள் முதலில் உட்காருங்கோ.... மற்றவர்கள் எல்லாம் அடுத்த பந்தி.'' — பாவம், யாரோ ஒருவர் பொறுமையுடன் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறார். தன்னைக் கடந்து



'' என்ன யோசிக்கறேள்! நான் இந்த உபாயத்தைக் கையாண்ட நாளா ஒரு ஆசாமியானும் என்னிடம் வந்து சம்பள உயர்வு வேணும்னு போனஸ் வேணும்னு மூச்சு விடல்லே!''

சென்ற சாமாவைக் கையைப் பிடித்து நிறுத்தியவர், ''ஓய், உமக்கு என்னய்யா, ஓட்டா, உறவா ? ஆபீஸா ? என்னய்யா, அவசரம்? ஒரு நாள் கிழமைன்னு எப்படித்தான் தெரியறதோ, வந்துடறாங்கள்.'' சாமாவின் உடல் பதறியது. ஒரே வினாடிதான். தம் நிலையை, உறவை வெளிக் காட்டிவிட்டால் எல்லாமே சரியாகிவிடும். ஆனால் அவருடனே வளர்ந்துவிட்ட வீம்பு அவ்வளவு எளிதில் விட்டுக் கொடுத்துவிடுமா? பத்து வருஷப் பிரிவில் உரம் ஏறிக் கிடந்ததே? பதில் எதுவும் சொல்லாமல் உள்ளே செல்லத் தொடங்கிவிட்டார். அதற்குள் அந்தச் சிறிய இடத்தில் மூன்று வரிசைகளும் நிரம்பிவிட்டன. மறுபடியும் இடப் பிரச்னை. நேராகச் சமையல் அறைக்கே சென்றார் சாமா.

''பெரியவரே, இங்கே எங்கே வந்தீர் ?'' பிரதான சமையற்காரரின் கேள்வி.

''இல்லை, நான் சாப்பிடப் போறதில்லை. ஒரு சின்ன டம்ளரில் பாயசம் மட்டும் கொஞ்சம் கொடுங்கோ. ஓடியே போயிடறேன்.'' சமையற்காரர் விநோதமாகப் பார்த்தவாறே உள்ளே சென்று கையில் ஒரு சிறு டம்ளரில் பாயசத்துடன் வருகிறார்.

''இந்தாரும், பால் பாயசம் சாப்பிடும். பந்தியில் சாப்பிட்டால் உடம்புக்கு ஆகவில்லை. சாப்பிடாமல் இருக்க மனசு கேட்கவில்லை. தினம் கிடைக்குமா, இப்படி. ம்... சபலம் யாரை விட்டது ?''

பாயசத்தை இரண்டே வாயில் 'மடக்', 'மடக்' கென்று குடித்தவர், சமையற்காரரின் தாராளமான வார்த்தைகளையும் சேர்த்து விழுங்கி விட்டார். ஆம்; சமையற்காரர் கூறியது போல் சபலம்தான். இவ்வளவு வருஷங்களாகக் கட்டி வளர்த்த வைராக்கியம், சம்பந்தி வீட்டில் காலெடுத்து வைக்கக் கூடாதென்ற ரோசம், — எல்லாவற்றையும் மூட்டை கட்டி வைத்து, முதல் நாள் குளக்கரையில் கேள்விப்பட்ட செய்தியைத் தொடர்ந்து, அதே வீட்டில் நுழைந்து, பேரன் பூணூல் கல்யாணத்தில் பால் பாயசமாவது சாப்பிட்டுவிட வேண்டும் என்ற பிடிவாதத்தோடு நடந்து கொண்டதற்குச் சபலம் என்று சொல்லாமல் வேறு என்ன பொருள்? ஆனால், அந்த வினாடி முதல் அவர் விட்டுப் போன யாத்திரையைத் தொடங்கி விட்டார்.

அங்கே, அந்தப் பங்களாவில், அறையில் இருந்த துணி மூட்டையைக் கண்டு வியப்படைந்து, அதற்கு உரியவரை மங்களமும், சம்பந்தியும் தேடிக் கொண்டிருந்த சமயத்தில் அந்தச் சாமாவோ எதுவுமே நடக்காதது போல், எங்கும் வியாபித்துள்ள எல்லையற்ற அந்த ஏதோ ஒன்றைத் தேடி நடந்து கொண்டிருந்தார்.

# 100% இயற்கை

பதினெட்டு
அபூர்வ மூலிகைகளைக்
கொண்டு
தயாரிக்கப் படுவது
விக்கோ

# வஜ்ரதந்தி

பிரபல ஆயுர்வேத பறபசை மற்றும் பல் பொடியான விக்கோ வஜ்ரதந்தி 18 அரிய மூலிகைகளிலிருந்து தயாரிக்கப்படு கிறது. இம் மூலிகைகளின் தனிப்பட்ட குணங்கள் யாவரும் நன்கு அறிந்ததே. ஆனல் குறிப்பிட்ட அளவுகளில் இவற் றைக் கலக்கும் போது அவற்றின் குணத் திறன் அதிகமாகிறது. விக்கோ வஜ்ரதந் தியின் தற்போதைய செய்முறை பல் லாண்டு ஆராய்ச்சியின் விளைவாகும்.

தவறாது விக்கோ வஜ்ரதந்தி உபயோகித் தால், பற்சிதைவு, பயோரியா, ஈறுகளி லிருந்து சீழ் மற்றும் இரத்தம் வருதல், மூச்சிலே துர் நாற்றம் முதலியவை தடுக்கப் படுகிறது.

ஒரு முறை உபயோ கித்துப் பாருங்கள்; உண்மை புரியும்.

ஆயுர்வேத
பற்பசை மற்றும்
பற்பொடி.
வாய் ஆரோக்கியத்துக்கு
ஒப்பற்றது.










விக்கோ லாபெரட்டரீஸ்
தாதர், பம்பாய்-14

TML

ஸ்டாக்கிஸ்டுகள்: R. L. கௌடர் & கோ., 59, பந்தர் தெரு, சென்னை -1

# வல்லவனுக்கு வல்லவன் !

நவீன முறையில் இதுவரை கேட்டிராத வகையில், 'ஸ்டிரைக்' செய்து குழப்பத்தின் உருவமான நம் அரசாங்கத்தையே குழப்பிய பெருமைக்கு உரியவரான இந்திய ரயில்வே உயர் அதிகாரி திரு கங்குலி அவர்களுக்குப் பக்கத்தில் உள்ள இந்த "ஜோக்குகள்" சமர்ப்பணம்!



"யார் அவர்? ஆகாயத்தில் மிதக்கிறாரே, விண்வெளி வீரரா?"

"அதெல்லாம் ஒன்றுமில்லே. விமானத்துறை அதிகாரிதான். சொன்ன பேச்சைக் கேட்கவில்லே என்று அவர் ஆசனத்தை மட்டும் தனியாகக் கழற்றி விட்டு விட்டார்கள்!"

*



"சார், கங்குலி எதிரிருந்த ரயில் பெட்டியை அநாமத்தாக விட்டது போல் உங்களையும் இப்படி நடுக்காட்டில் கொண்டு வந்து விட்டுவிட்டார்களே, இரவு 'பேய்' நடமாட்டமிருக்குமே!"

"இருக்கட்டும், மந்திரியையே சமாளித்தவனாயிற்றே நான்!"

★

தபால்காரர் : உங்கள் மகனிடமிருந்து தீபாவளி வாழ்த்து சார்!

"வாங்க முடியாது. அதனுள் கட்டாயமாக ஓய்வுபெறுமாறு கடிதத்தைச் செருகியிருப்பார்கள், யார் கண்டது!"



"ரயில்வே அதிகாரியிடமிருந்தா கடிதம்? என்ன எழுதியிருக்கிறார்?"

"அவருடைய எல்லாப் பொறுப்புக்களையும் நாமே ஏற்றுக்கொள்வதாகக் கூறியிருந்தோம் அல்லவா? அவருடைய பெண்ணின் கல்யாணத்தையும், பிள்ளைகளின் படிப்பையும் 'ஜாம் ஜாம்' என்று நடத்தி வைக்க முடியுமா என்று கேட்டிருக்கிறார்!" - கேஸியெம்




சில சங்கீத ரசிகர்களும் வித்வான்களும் பேசிக்கொண்டிருந்தார்கள். ஒரு ரசிகர் "வித்வான்களின் திறமைக்கும் உழைப்புக்கும் தகுந்தவாறு வெகுமதி கிடைப்பதில்லை. ஆகையால் ஜனங்கள் முயற்சி எடுத்துக் கொண்டு அவர்களை நன்றாகக் கௌரவிக்க வேண்டும்" என்றார்.

அப்போது மிருதங்க வித்வான் வேலூர் ராமபத்ரன் அவர்கள், "ஸங்கீத வித்வான்களுக்கு எவ்வளவு செய்தாலும் தகும். அதனால்தான் மிருதங்கம் வாசிக்கும்போது அடிக்கடி 'தகும், தகும்' என்று கட்டிக் காட்டி வாசிக்கிறோம்" என்றார்! - எஸ். பி. மணி



மியூஸிக் அகடமியில் சென்ற வருஷம் டி. வி. கோபாலகிருஷ்ணன் அவர்களின் 'பல்லவி' நடந்தேறியது. நிகழ்ச்சிக்குப் பிறகு டி. வி. கோபாலகிருஷ்ணனும், பாலமுரளியும், வேறு சிலரும் காண்டீனில் பேசிக்கொண்டிருந்தோம். அப்போது அங்கே ஓர் இளம் வித்வான் பாலமுரளியை நோக்கி, "அகடமிக் கமிட்டி எனக்கும் பல்லவிக்கு சான்ஸ் கொடுக்காவிட்டாலும் அநுபல்லவிக்காவது தயவு செய்யலாம்" என்று குறும்பாகச் சொன்னார். அப்போது பாலமுரளி அவரைப் பார்த்து, "அநுபல்லவிக்கும் சான்ஸ் கிடைக்காவிட்டால் (அவர்கள்) சரணத்தையும் பிடித்துக்கொண்டு விடாதீர்கள்" என்றார்.

- எஸ். பி. மணி



# குங்குமம்



விளக்குகள் தமிழகத்தின் ஒளிக் கதைகளை விளக்கிக் கொண்டிருந்த இனிமையான இராப் போது. புத்தம் புதிதாகப் பொலிவுடன் விளங்கிய கோட்டையின் மேன்மாடத்து நிலா முற்றத்தில், அரசி சவுந்திர வடிவு ஆழ்ந்த சிந்தையில் மூழ்கியவாறு இமுக்கும் மேற்று மாக நடந்து கொண்டிருந்தாள். கனத்த காற் சிலம்புகளின் கருதி மணக்கும் ஓசையோ, காற்றில் மிதந்து வந்த குயிலினங்களின் கீதமோ அவளுடைய குழையும் கொப்பும் அணிந்த செவிகளில் நுழைய வேண்டுமே!

முதல் யாமம் நடந்து கொண்டிருந்த வேளை.

சற்றைக்கெல்லாம் அரசர் ஊமைத் துரை மேன்மாடம் நோக்கி விறுகொண்ட சிங்கம்போல் வந்து கொண்டிருந்தார். அது வரையிலும் அரசி உணவு கொள்ள வில்லை என்ற செய்தி அவருக்கு வியப்பாக இருந்தது.

ஆழ்ந்த ஆலோசனையுடன் அன்னம் போல் நடை பழகிக் கொண்டிருந்த அரசியை நெருங்கி, "வடிவு, அந்நியர்களைப் பற்றிச் சிந்திக்கத்தான் நான் இருக்கிறேனே! எதற்காக இந்தப் பசி மறந்த சிந்தனைத் தவம்?" என்றார் கனத்துக் கரகரத்த குரலில். அந்தக் கம்பீரமான குரலில் சொற்கள் விழும் போது பெரிதாகத் தடுமாறின. இக்கித் திக்கிப் பேசியதால்தான் அவரைச் சிறு வயது முதற் கொண்டே ஊமைத்துரை என்று அழைக்கத் தொடங்கினர். அதுவே நாளடைவில் இயற்பெயர் போலாகி விட்டது. உண்மையில் அவருடைய இயற்பெயர் குமாரசாமி.

கணவருடைய குரல் கேட்டுச் சிந்தனை கலைந்து திரும்பிப் பார்த்தாள், அரசி சவுந்திரவடிவு.

"வடிவு, ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்? என்ன நடந்தது? கும்பினிக்காரனைப் பற்றித்தானே? அந்தக் கழுகுகளைக் கூண்டோடு நம்மவர்கள் ஒழித்துவிடுவார்கள் என்பதற்கு இந்தப் புதிய கோட்டையே சான்று. கவலைப்படக் காரணமே இல்லை."

"பிரபோ! எனக்குப் பறங்கியர்பற்றிய கவலை துளியும் கிடையாது" என்றாள் சவுந்திரவடிவு.

"பின்? ஏன் இந்த ஆழ்ந்த சிந்தனை? அதுவும் உண்ணுமல் கொள்ளாமல்?"

"கோயிலுக்குச் சென்றிருந்த தோழிப் பெண்கள் ஒரு செய்தி கொண்டு வந்தனர். அவர்களுள் ஒருத்தி நம் ஆபரணின் மகள். அது தான் என்னை இப்படி விளங்காத வியப்பில் ஆழ்த்தி விட்டது."

"என்ன செய்தி, அது?"

"யாரோ ஒரு பறங்கி மாது. கோயிலுக்கு வந்தாளாம். அவள் ஆடை அணிந்திருந்த கோலம் பறங்கியச்சி என்றும் சொல்ல முடியவில்லையாம்; தமிழச்சி என்றும் சொல்ல முடியாதாம். கிளிப் பிள்ளை போலத் தமிழைப் பேசுகிறாளாம். இதில் ஆச்சரியம் என்னவென்றால், குருக்கள் கொண்டு வந்து கொடுத்த குங்குமப் பிரசாதத்தைத் தானும் வாங்கி நெற்றியில் இட்டுக் கொண்டாளாம்!"

''வியப்பாக இருக்கிறதே !''

''இன்னும் வேடிக்கையைக் கேளுங்கள். கோயில் வழிபாட்டை முடித்துக்கொண்டு நம் தோழிப் பெண்கள் இருவர் திரும்பிக் கொண்டிருக்கையில், இரண்டு முரட்டுக் கும்பினிப் பேய்கள் அவர்களை வழிமறித்துக் கடத்திச் செல்ல முயன்றனராம் !''

''அப்படியா ! பாதகர்கள் !''

''தோழிப்பெண்கள் குறையோ முறையோவெனக் கூச்சலிட்டுக் கதறினார்களாம். பிடாரியம்மன் கோக்கில்




இது நிகழ்ந்திருக்கிறது. கோச்சு வண்டியில் சென்று கொண்டிருந்த அந்தப் பறங்கியச்சி, தோழிப் பெண்கள் போட்ட கூச்சலைக் கேட்டு ஓடோடி வந்திருக்கிறாள்.''

''வந்து....?''

''அந்தக் கும்பினிப் பேய்களைத் தடுத்திருக்கிறாள். அது மட்டுமா ? கோவிலுக்குச் சென்று வரும் பெண்களைக் கடத்துவது பாவம் என்று சித்தாந்தம் பேசினாளாம்.'';

''அவள் அப்படித்தான் பேசினாள் என்று இந்தத் தோழிக்கு.... ஓ... துபாஷின் மகளுக்குப் பறங்கி பாஷை தெரியுமில்லே... ம்... மேலே என்ன நடந்தது ?''

''கும்பினிக் குண்டர்கள் நம் கோயிலைக் குறை கூறிப் பேசினார்களாம். அவர்களோடு வாதாடி நம் பெண்களை மீட்டு அனுப்பி வைத்திருக்கிறாள் அந்தப் பறங்கியச்சி !''

''யார் அவள்?''

''அதுதானே தெரியவில்லை.''

''அவளை யாரோ ஒரு தமிழ்க் குடிமகன் காதலித்து மணந்து கொண்டிருக்க வேண்டும் என்று கருதுகிறேன். நானே விசாரித்துப் பார்ப்போம். வேளைக்கு நேரமாகிறது. வா போவோம்!'' என்று அவளை அணைத்தபடியே அழைத்துக் கொண்டு போனார் வணமைத் துரை.

**நா**ட்டுப் பற்றையே நாளங்களாகக் கொண்ட நல்லுணர்

வுடைய மனிதர்கள் பலர் வாழ்ந்த காலம் அது.

அம்மம்மா.....! நெஞ்சு இனிக்கிறது; நினைவில் மகிழ்ச்சி கூடு கட்டுகிறது! வீர பாண்டிய கட்டபொம்மன் இறந்துபட்டதாலேயே விடிவிளக்கு அணைந்து விட்டதாக அவர்கள் நினைக்கவில்லை. அடுத்து ஊமைத்துரை இருக்கிறார் என்கிற தெம்பில் செயல்பட்டனர்; செம்மாப்புக் கொண்டனர். இல்லையென்றால் பாளையங்கோட்டைச் சிறையில் அடைபட்டிருந்த சிங்கம் ஊமைத் துரையை, மக்கள் பொங்கி எழுந்து மீட்டிருப்பார்களா ? அல்லது இடிபட்டுத் தரை மட்டமான கோட்டையை மேலும் வலிவு மிக்கதாக ஆறே நாட்களில் தேவதூதர்களைப் போலக் கட்டி முடித்திருப்பார்களா ?

பாஞ்சாலங் குறிச்சியின் புதிய கோட்டை எழுச்சிக்குப் பிறகு காணும் முதல் போர் முழக்கம் வானைக் கிடுகிடுக்க வைத்தது.

பாஞ்சாலங்குறிச்சியைத் தாக்கி, பாளையங் கோட்டையிலிருந்து தப்பி ஓடிவந்த ஊமைத் துரையைச் சிறைப்படுத்திக் கொண்டு செல்ல வந்த தளபதி மெக்காலே, புதியதாக எழுந்திருந்த கோட்டையைக் கண்டு பெரிதாக அதிர்ந்து போனான்! கட்டபொம்மன் இருந்த போது பானர்மேனால் தரை மட்டமாக்கப் பட்ட கோட்டையா இது ? என்ன விசித்திரமான காட்சி! விந்தையான ஏற்பாடு !

கும்பினி பீரங்கிகள் கோட்டையை நோக்கி வாய் பிளந்து கர்ஜித்தன. பனஞ்சாறும், வைக்கோலும், முட்டையும் கலந்து கட்டப் பெற்ற கோட்டையாயிற்றே அது! எளிதில் பிளந்துவிட முடியுமா ?

இருதரத்துக் கை கலப்பிலும் எழுந்த ஓசை, ரத்த கீதமாக ஒலித்தது. வீழ்ந்துபட்ட வீரர்கள் வீரிட்டுக் கதறினர். முடிவில் வெள்ளைக் கும்பினியர்க்கே பெருத்த சேதாரம். மெக்காலே மருண்டு போனான். தப்பினால் போதும் என்ற நிலையுடன் பின்வாங்கிப் படையுடன் ஓட்டம் பிடித்தான். வெள்ளையரின் துப்பாக்கி, பீரங்கிகள், குண்டுகள் மறவர் கைக்கு மாறின.

குலையநல்லூரிலிருந்து குலைநடுங்கி ஓட்டம் பிடித்த வெள்ளைப் பறங்கியர், முன்னம் தங்களால் பிடிக்கப்பெற்ற ஸ்ரீ வைகுண்டத்தை அடைந்தனர். ஆனாலும் பாஞ்சாலங் குறிச்சி வீரர்கள் அவர்களை விடுவதாக இல்லை. தளபதி பராக்கிரம பாண்டியன் களைப்பையும் பாராது ஓங்கிக் குரல் கொடுத்தான். "வீரர்கள்! முற்றுகையை உடைத்தது பெரிதல்ல; முதன் முதலாக நாம் இழந்த ஸ்ரீ வைகுண்டத்தைப் பிடித்துவிட வேண்டும். ஆதித்தன் உதிப்பதற்குள் அது நம் கையில் வந்து சேர வேண்டும். வைகுண்டம் ஒன்று அவர்களுக்கா? அல்லது நமக்கா என்பதைப் பார்த்துவிட வேண்டும் !"

பராக்கிரமக் குரல் பாழாகவில்லை. முதல் வெற்றி ஸ்ரீ வைகுண்டம்! சங்கு ஒலித்தது: அதிர்ஷ்டச் சக்கரம் சுழலத் தொடங்கியது. இதனைக் கேள்விப்பட்ட அரசர் ஊமைத் துரை, பெருமிதமும் பெரு மகிழ்வும் கொண்டு பாஞ்சாலங்குறிச்சியிலிருந்து புறப்பட்டு அங்கு வந்து சேர்ந்தார்.

எழு ஞாயிற்றின் முழு அழகை வழிபட்டுக் கொண்டிருந்தான் தளபதி பராக்கிரம பாண்டியன்! என்னே வியப்பு! கதிரவனே எதிரே வந்து நின்றது போலல்லவா பாஞ்சையரசர் ஊமைத்துரை நிற்கிறார். மெய்ம்மறந்து பணிந்தான். அவனைக் கட்டித் தழுவிக் கொண்ட ஊமைத்துரை, "பராக்கிரமா! முன்னம் உன் பெயரிலிருந்த சோழ, பாண்டியர் பெருமையையே நீ காத்து விட்டாய் ! அந்த மரபு வீரம் உன்னிடம் சோடை போகவில்லை" என்றார் நாத் தழுதழுக்க ! கண்களில் ஆனந்த நீரோடை !

"அரசே! எல்லாம் உங்கள் ஆசீர்வாதம்" என்றான் தளபதி பராக்கிரம பாண்டியன்.

"அடுத்து என்ன செய்யப் போவதாக உத்தேசம், பராக்கிரமா ?"

"உத்தேசிக்க ஒன்றுமே இல்லை. படை திரட்டிக் கொண்டு நேரே தூத்துக்குடிக்குப் பயணமாக வேண்டியதுதான்."

"தூத்துக்குடிக்கா ?"

"ஏன்? தூத்துக்குடிக்கென்ன?"

"வீரர்கள் களைத்திருக்கிறார்கள்.... பிறிதொரு சமயம்....."

"அரசே ! என்னை மன்னியுங்கள். வெற்றிச் சுழல் நம் பக்கம் இருக்கும்போதே இழந்த தூத்துக்குடியையும் கைப்பற்றிவிட வேண்டும். தங்களை இகழ்ந்து பேசிய அந்த இழிகேடன் பக்கெட் என்பவனைச் சிறை செய்து வந்து சித்திரவதை செய்ய வேண்டாமா ?"

வெள்ளைத் தளபதிகளுள் ஒருவனான பக்கெட் துரையின் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் மீசை துடி துடிக்க, முடுக்கிவிட்ட ரோசம் வெடி வெடிக்க, மீளாத மானம் தேனாகக் கொட்டித் திமிறி எழச் செய்தது ! பற்களில் நறநறவென்று ஓசை: "பக்கெட் தூத்துக்குடியிலா இருக்கிறான்?"

"ஆம், பிரபோ !"

"கொடியவன் ! பாளையங் கோட்டைச் சிறையில் என்னைப் பலர் பார்க்க அவமானம் செய்தான் ! காய்ச்சல் என்றும் பாராது தலையில் குடம் குடமாகத் தண்ணீரைக் கொட்டினான். பத்துப் பதினைந்து பறங்கியர்களைக் கொண்டு பச்சாத்தாபமின்றி என் முகத்தில் காறி உமிழச் செய்தான் ! அவனைச் சிறைப்படுத்திக் கொண்டு வந்து என் கோட்டையில் பழிக்குப் பழி வாங்குவேன் ! பராக்கிரமா! இதோ நானே புறப்பட்டுவிட்டேன்! இரக்கம் பார்த்து இரக்கம் பார்த்துத் தான் என் அண்ணன் கட்டபொம்முவின் கதை கயத்தாற்றுக் கயிற்றில் முடிந்தது. அந்த இரக்கத்துக்கு நான் இடம் கொடேன். புறப்படு !"

ஊமைத் துரையின் வீர கர்ஜனை ஓயுமுன்னமே பாஞ்சை வீரர்கள் வீரகோஷமிட்டுத் தூத்துக்குடி நோக்கிப் பயணப்பட்டு விட்டனர்.

தூத்துக்குடி போர்முனை வெள்ளைப் பறங்கியர்க்குத் துறக்கம் காட்டியது. எஞ்சியவர் மிஞ்சியது போதும் என்று எடுத்தனர் ஓட்டம் ! என்னவோ வந்தது போலவே பாஞ்சாலங்குறிச்சி அரசர் ஊமைத் துரை வென்

ளைத் தளபதி பக்கெட்டைச் சிறைப் பிடித்தார்.

ஆத்துக்குடிப் போரில் இப்படி ஒரு சுக மான திருப்பம் ஏற்படும் என்று ஊமைத் துரை எதிர்பார்த்தாரில்லை. களைத்திருந்த மறவர்ப் படைகளை வளைத்து நொறுக்கிவிடு வார்களோ என்கிற நினைப்பு உள்ளூற அவ ருக்கு இருக்கத்தான் செய்தது. மேலும் ஆத்துக்குடி வெள்ளையர்களுக்கு அப்போது கேந்திரம் போல் விளங்கியது. கோட்டையும் ஆயுதத் தளவாடங்களும் கொண்ட ஆத்துக் குடி தான் பறந்தது என்றால் ?

பிடிபட்ட இரண்டு வெள்ளைச் சிறு படைத் தளபதிகளுள் பக்கெட்டும் ஒருவன் என்கிற செய்தி ஊமைத்துரைக்கு ஒரு நிறை வான அமைதியைத் தந்தது. மற்றவனை விடுதலை செய்துவிட்டு, பக்கெட் என்பானை மட்டும் விலங்கிட்டுப் பாஞ்சாலங்குறிச்சி நோக்கி அழைத்துச் சென்றனர். தன்னுடைய உயிர் சித்திரவதையுடன் பிரியப் போகிறது என்ற கிலி பிறந்துவிட்டது பக்கெட்துரைக்கு!

பெருக்க எழுச்சிக் குரலுடன் படைகள் பாஞ்சை நோக்கிப் பயணமாயின.

கோட்டை வாசல் கோலாகலமாக விளங் கியது. மறவர்ப் படைகள் வெற்றி முழக்கத் துடன் திரும்பி வருகின்றன என்ற தித்திப் பான செய்தி பாஞ்சை மக்கள் வயிற்றில் பாலூற்றியது போல இருந்தது. எங்கும் கமுகும் தோரணமும் எழில் கூட்டின.

தலைவாயிலில் மகிழ்ச்சி பொங்கிய சிரிப் புடன் கணவருக்கு வெற்றித் திலகம் இட்டு வரவேற்றாள் அரசி சவுந்திரவடிவு. "தங்கள் சுதந்திரப் போர்க் கனவு விரைவில் இந்த நாட்டுக்கு வெற்றி கூட்டும்!"

கடகடவென்று சிரித்தார் ஊமைத்துரை. "தேவி ! நான் எண்ணியது எப்போதும் என்னைக் கைவிடாது என்பதற்கு இந்த எத்தன் பக்கெட்துரை — அவன்...சிறைப்பட் டான் என்பதே சான்று!" என்று கூறித் தொலைவில் விலங்குடன் நின்றிருந்த பக் கெட்டைச் சுட்டிக் காட்டினார். பிறகு, "முத்துசாமி !" என்று ஓங்கிக் குரல் விடுத் தார். கசையடி கொடுக்கும் குண்டர்போல் எதிரே வந்து நின்றான் முத்துசாமி. ஒரு யானையே அடிபெயர்த்து வந்து நின்றதுபோல் இருந்தது அவனுடைய வருகை.

சற்றைக்கெல்லாம் பக்கெட் துரையை அருகே கொண்டு வந்து நிறுத்தினர். அவனை விழுங்கி விடுகிறதுபோலக் கன்ற கண்களை உருட்டி நோக்கினார் ஊமைத்துரை. "நாய் மாதிரி கத்துவாயே ! எங்கே போய்விட்டது அந்த வாய்? தூ....." காறி உமிழ்ந்து அருகே சென்று கன்னத்தில் ஓங்கி ஓர் அறை விட்டார் ஊமைத்துரை. வாடம் கலங்கித் திணறிப் போன பக்கெட் துரையின் கண்கள் சினத்தால் சிவந்தன. கன்னத்தில் விரல்கள் ரத்தமாகிக் கன்றிப் பதிந்து காணப்பட்டன.

"என்மீது காறி உமிழ்ந்தான் இந்த நாய் ! இவனை என் வீரர்களை யாவரையும் விட்டுக் காறி உமிழச் செய்கிறேன். எச்சிலால் குளியல் நடக்கட்டும். இன்னும்... இன்னும்... ஹா!" கடகடவென்று இடிமுழக்கம் போல் பெரு நகை புரிந்தான் ஊமைத்துரை.

இந்த நேரத்தில்தான் விதியும் ஊமைத் துரையின் சிரிப்பைக் காட்டிலும் வலிமை வாய்ந்த பெருநகை புரிந்தது ! அதன் வலிமை பெரிதுக்கெல்லாம் பெரிதாயிற்றே !

குழுமியிருந்த மக்களிடையே ஒரு சல சலப்பு ! எங்கோ கோச்சு வண்டியின் குதிரை களின் குளம்படிச் சத்தம் கேட்டது. சற்றைக் கெல்லாம் அது மிக நெருங்கிக் கேட்டது. அதனுள் ஒரு வெள்ளை மாது தமிழச்சிக் கோலத்தில் காணப்பட்டாள்.

காலில் அணிந்திருந்த இரட்டைத் தண்டைகள் அசைய வந்து கொண்டிருந்த அந்த வெள்ளை மாது, அரசர் ஊமைத்துரை யின் அருகே வந்து நின்று, "வணக்கம் அரசே!" என்றாள்.

உற்றுக் கவனித்த ஊமைத்துரை, "யாரம்மா, நீ ?" என்றார் கனிவுடன். அவ ருக்கு ஒரு பறங்கிப் பெண் தமிழ் பேசியதில் ஆனந்தம் கொள்ளவில்லை.

வந்தவள் சொன்னாள்; திக்கித் திணறித் தான் சொன்னாள்: "அரசே ! எனக்குத் தமிழில் ஃப்ளுயண்டா பேச முடியாது....

குழந்தையின் கேள்வி: "விலை வாசியெல்லாம் 'ஆனை விலை, குதிரை விலை'ன்னு ஏறிப் போச்சுன்னு சொல்றேளே, அப்படின்னு என்ன ?"

அட்டையில் வண்ணப்படம்: ஹரலிங்கம்

நீங்கப் பேசினா... அண்டர்ஸ்டேண்ட் பண் ணிக்க முடியும். துபாஷைக் கூப்பிடுங்க.... ஐ வாண்ட் டு டாக் இன் இங்லிஷ், — ஃப்ளுயண்ட்லி.....!"

துபாஷ் வந்தார். துவிபாஷியான அவ ரைப் போன்றவர்கள் தாம்... அக்காலத்து மொழிபெயர்ப்பாளர்கள்.

அதற்குள் துபாஷின் மகன் ஏதோ காது களில் சொல்லக் கேட்டு ஓடி முன் வைத்து அருகே வந்து நின்றாள் அரசி சவுந்திரவடிவு.

அரசியாரைக் கண்டதும் அந்தப் பறங்கிப் பெண், "தாயே, வணக்கம் !" என்று தமிழில் கூறிப் பின்னர், "எனக்கு மாங் கல்யப் பிச்சை கொடுங்கள்!" என்று கெஞ்சி னாள். துபாஷ் மொழிபெயர்த்தார்.

இப்போது எல்லாருக்குமே புரிந்துவிட்டது. வந்தவள் வெள்ளைத்துரை பக்கெட்டின் மனைவி.

"உன் பெயர் ?" அரசி கேட்டாள்.

"மேரி விஜேலா!... உங்கள் தமிழ்ப் பண் பைப் பெரிதாக மதிப்பவள்; நானும் ஒரு தமிழச்சி ! ஆங்கில மாது என்று என்னை நிராகரிக்க வேண்டாம் !"

ஊமைத்துரை கேட்டார்: "இப்போப் பட்ட கொடியவனுக்கு மனைவியாக வாய்த்

கது உன் தலைவிதி தாயே! இது உனக்குப் புரியவில்லை?''

''இல்லை, உங்களுக்குத்தான் புரியவில்லை.''

'' என்ன! எனக்குப் புரியவில்லையா?''

''ஆம், அரசே! உங்களைக் கேவலப்படுத்தியதும் சித்திரவதை செய்ததும் என் துணைவர் மிஸ்டர் பக்கெட் அல்ல!''

''பின்?''

'' தளபதி மெக்காலேயின் துணைவர் மிஸ்டர் பக்கெட்! அவர் கும்பினிப் பட்டாளத்தின் சேவகர்! நீங்கள் இடுகிற ஆணையை உங்கள் பணியாளர் செய்யவில்லையா? அந்தப் பாவம் செய்கிறவனைச் சாருவதில்லை; மேலிடத்து உத்தரவைச் சாரும்!''

வாயடைத்துப் போனார் ஊமைத்துரை. ''நன்றாகப் பேசுகிறாய் பெண்ணே!''

''நான் தமிழில் சிலப்பதிகாரத்தைப் பிறர் சொல்லக் கேட்டவள். அதனால் கண்ணகி போல வாதம் புரிந்து பார்ப்போம் என்று ஓடோடி வந்தேன்!''

''ஓ... நீ கண்ணகியா?''

''ஏன் இருக்கக் கூடாது? கண்ணகி தமிழில்தான் பிறக்க வேண்டுமா? அவள் எங்கும் பிறக்கலாம். ஆனால் பாண்டியன் தமிழில் தான் பிறக்க முடியும்! ஏனென்றால் குற்றவாளி என்று அறிந்ததும் உயிர் துறந்தவராயிற்றே! நீங்கள் பாண்டிய வம்சம். நீங்களும் குற்றவாளியாகக் கூடாது என்பதுதான் என் பிரார்த்தனை.''

''என்னுடைய பிரார்த்தனைக்காகத்தான் நீ வந்திருக்கிறாயா?''.

''ஆமாம். என் கணவருக்காக அல்ல. அவர் எப்படிப் பார்த்தாலும் குற்றமற்றவர். நீங்கள் குற்றவாளியாகிவிடக் கூடாதே என்பதுதான் என் தவிப்பு!''

கூட்டமே வியப்பார்ந்த நிலையில் நோக்கியது. மேரி வியோலாவோ, அரசியிடம் சென்றாள். ''தாயே! என் நெற்றியில் குங்குமம் அழகாக இல்லையா?''

அரசி சவுந்திரவடிவு மருண்டாள். பிறகு சொன்னாள்: '' அழகாக இருக்கிறது; வெள்ளை உடம்புக்குப் பொருத்தமாகவும் இருக்கிறது.''

'' அந்த அழகையும், பொருத்தத்தையும் அழிக்க நினைக்கிறீர்களா?''

''குங்குமத்தை நீ ஓர் அழகுச்சாதனமாக ஏன் உபயோகிக்கக் கூடாது?''

சற்றே மேனி சிலிர்த்த மேரி வியோலா, '' தாயே! நீங்கள் எப்போதாவது எங்கள் மாதாகோயிலுக்கு வந்ததுண்டா?'' என்று கேட்டாள்.

''அவசியம் ஏற்படவில்லை.''

''அவசியம் ஏற்பட்டால்தான் வருவீர்கள். எனக்கென்ன அவசியம் என்று நான் வாரம் ஒரு முறை உங்கள் கோயிலுக்குச் செல்ல வேண்டும்? சென்ற மாதம்கூட நான் இந்தப் பாஞ்சைக் கோயிலுக்கு வந்திருந்து திரும்பினேன். ஏன் தெரியுமா?''

'' ஏன்?''

'' என் கணவர் நல்லபடியாக என்னுடன் நாடு திரும்ப வேண்டுமே என்பதற்காகத் தான். உங்கள் பெண் குலத்தை நான் பெரிதாக மதிப்பவள். இதனைச் சொற்களால் நிரூபிக்க முடியாது என்பதையும் நானறிவேன். தாயே! உங்கள் திருக்குறளின் மீது உங்களுக்குச் சத்தியமான நம்பிக்கை — பக்தி இருக்குமானால், இன்னா செய்தாரை ஒறுத்து நன்னயம் செய்யும் பண்புக்கிணங்க என் கணவரை மன்னியுங்கள்! நான் குங்கும அழகோடு இங்கிலாந்து செல்ல அனுமதியுங்கள். குங்குமத்தின் மகிமை பற்றி நான் இங்கிலாந்தில் பிரசாரம் செய்யவும், உங்கள் கணவர் குற்றமற்றவராகவும் — இரக்கமுள்ளவராகவும் நீங்கள் விரும்பினால் என் கணவருக்கு உயிர்ப்பிச்சை அளியுங்கள்!''

'' ஓஹோ!'' என்று கர்ஜனை புரிந்தார் ஊமைத்துரை. ''வியோலா! முடிவாக நான் ஒரு கேள்வி கேட்பேன். அதற்கு நீ சரியான விடை கூறினால், உன் கணவரின் உயிர் பிழைக்கும்!'' என்றார். அப்போது மேரி வியோலா கண்களை ஒரு கணம் மூடி இரு துளி கண்ணீர் நனைய, ''ஓ.... லார்ட் முருகா.... சேவ் மீ....!'' என்றாள். எவர் மனத்தையும் உருக்கவல்ல பிரார்த்தனையாக அது இருந்தது.

ஊமைத்துரை கேட்டார்: ''பெண்ணே! இப்போது நான் உன் கணவருக்கு உயிர்ப்பிச்சை அளித்துவிடலாம்; உன் குங்குமத்தையும் இப்போதைக்குக் காத்துவிடலாம். நீ என்று இங்கிலாந்து திரும்புகிறாயோ அன்று வரை இந்த யுத்த மேகம் நிறைந்த மண்ணில் உங்கள் பாஷைப்படி இப்பரந்த இந்தியாவில் உன் கணவர் உயிருடன் இருந்து திரும்புவார் என்பது என்ன நிச்சயம்?''

''நிச்சயமுண்டு. இனிமேல் என் கணவர் இங்கு தங்கிப் போரில் ஈடுபட்டு, பல உயிரைக் கொன்று — அல்லது பல தாய்மார்களின் குங்குமத்தை அழிக்க நான் விரும்பவில்லை. நாளைக்கு நாங்கள் கப்பல் ஏறுகிறோம்.''

''உண்மைதானா?''

'' சத்தியம்!''

'' ஆகா!'' என்று தன்னுள் பாராட்டிக் கொண்ட ஊமைத்துரை, ''முத்துசாமி! பக்கெட்டை விடுதலை செய்! என் மகளைப் போன்ற மேரி வியோலாவின் குங்குமம் நிலைக்கட்டும்!'' என்று கூறிவிட்டு, மேரி வியோலாவை நோக்கி, '' மகளே! நீ குங்குமத்தோடு சாக நான் வாழ்த்துகிறேன் அம்மா!'' என்று உரக்கக் கூறினார். அவருடைய கண்களில் மாலை மாலையாக நீர் திரண்டது. மேரி வியோலாவோ, பூரித்த நெஞ்சுடன் ஊமைத்துரையின் கால்களைப் பிடித்து வணங்கினாள்.

விம்மிய நெஞ்சில் புரண்டு கொண்டிருந்த மலர் மாலையிலிருந்து ஒரு பூவைப் பறித்து மேரி வியோலாவின் தலையில் செருகி மகிழ்ந்தார் ஊமைத்துரை. அவருடைய இரக்கத்தையும், மேரி வியோலாவின் வாதத்தையும் கவனித்துக் கொண்டிருந்த மக்கள் கண்களில் மெய் சிலிர்த்த கண்ணீர் திரையிட்டது. அரசி சவுந்திரவடிவோ, ''பிரபோ! உங்கள் சரித்திரத்தில் இந்த ஒரு சம்பவம் போதும்!'' என்றாள். உண்மைதான்; ஆனால்.......

அந்தச் சம்பவம் மட்டும் நடக்கவில்லையானால் —

சரித்திரத்தின் போக்கில் வேறுவிதத் திருப்பம் ஏற்பட்டிருக்கலாம்!

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"விஜயவிகார்", 17-A, பிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அடுத்தது,
சயான் (கிழக்கு), பம்பாய்-22. D.D.

போன்: 47 14 55 தபால்பெட்டி: 6759 • தந்தி: 'GROWRICH'

உன்னத சேவையில் 25-வது ஆண்டு ஆரம்பம்
ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள திட்டங்கள்

**1971 நவம்பர் மாதம் புதிய குருப்புகள்**

| குறுகிய காலம்: 25 மாதங்கள் | | | நீண்ட காலம்: 40 மாதங்கள் | | |
|---|---|---|---|---|---|
| சேருவதற்கு கடைசி தேதி: 13-11-1971 | | | சேருவதற்குகடைசிதேதி: 27-11-1971 | | |
| முதல் ஏலத் தேதி: 14-11-1971 | | | முதல் ஏலத் தேதி: 28-11-1971 | | |
| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| B | 100/- | 2,500/- | E | 500/- | 20,000/- |
| C | 50/- | 1,250/- | F | 250/- | 10,000/- |
| F | 25/- | 625/- | G | 125/- | 5,000/- |
| G | 20/- | 500/- | | | |

நீண்ட காலம்: 50 மாதங்கள்—ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு

சேருவதற்கு கடைசி தேதி: 19-11-1971 :: முதல் ஏலத் தேதி: 21-11-1971

| வகுப்பு | தவணை | சீட்டுத் தொகை |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| LTA | 100/- | 5,000/- |
| LTB | 50/- | 2,500/- |
| LTD | 20/- | 1,000/- |

வேலை நேரம்: காலை 8 மணி முதல் 10-30 வரை: மாலை 4 மணி முதல் 7-30 வரை

வார விடுமுறை - திங்கட்கிழமை

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்:
'' பாலுஸேரி பில்டிங்ஸ் ''
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, தபால் பெட்டி: 414, சென்னை - 5
கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புது டெல்லி

இலவச பிரகடனத்திற்கு எழுதுங்கள்:

சீட்டுகள் ஒதுக்குதல்
கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது




**எமது வெள்ளி விழா ஆண்டு**

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

அந்தக் காட்சியை நினைத்துக் கொண்டாலே எனக்கு ஏனோ ஒரே சங்கடமாக இருக்கிறது.

ஆடி மாதத்தில் ஒரு நாள்; மாலை நேரம். ஒன்றியாக மேகத்தைப் போல் அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருந்தேன். பார்த்த இடமெல்லாம் பச்சைப் பசேல் என்று வயல்கள் பரந்து கிடந்தன. பக்கத்திலேயே வாய்க்கால் சலசலவென்ற இனிய ஓசையுடன் ஓடி, அங்கங்கே வயல்களுக்குச் சிறு கால்வாய்களாகப் பிரிந்து பாய்ந்து கொண்டிருந்தது. வயலில் தேங்கிய செந்நீரின் மேல் பசுமை மிகுந்த நெற் கதிர்கள் தலைதூக்கி நின்றன.

பசுமையோ பசுமை! எங்கே திரும்பினாலும் ஒரே பசுமை! பசுமைக்கு அடியில் அங்கங்கே காணப்படும் சிவந்த தண்ணீர்.

மாலைக் காற்று சிறிது வேகமாகவே வீசியது. நெற்கதிர்கள், காற்றை எதிர்த்து நிற்க முடியாமல், 'உய் உய்' என்று காற்று வீசும் திக்கிலேயே சாய்ந்து கொண்டிருந்தன.

மாலைச் சூரியன், சடக்கென்று மேகத்தின் மறைவிலிருந்து வெளிப்பட்டு, தன் பொற் கிரணங்களின் ஒளியைப் பச்சைப் பசேலென்ற வயலின் மேல் பரப்பத் தொடங்கினான். அந்தி நேரம் அழகாகவே இருந்தது.

அலைந்து கொண்டிருந்த நான், நின்று மேலே பார்த்தேன்.

நீர் சூல் கொண்ட கார்மேகங்கள், பரந்த விண்வெளியில் பூரண கர்ப்பிணிகளைப் போல் மெல்ல மெல்ல அசைந்து போய்க் கொண்டிருந்தன.

எந்த லட்சியமும் இல்லாத மேகங்களின் ஓட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன்; பார்த்துக் கொண்டே இருந்தேன்.

திடீரென்று ஒரு சத்தம் என்னை நினைவுலகுக்குக் கொண்டு வந்தது. அது வயிற்றைக் கலக்கும் ஒரு சத்தம்.

''அம்மே... அம்மே.... மே....!''

கொள்ளை அழகுடன் வெள்ளைப் பசுங் கன்று ஒன்று, பசும் வயல்களில் ஓயாமல் கத்திக் கொண்டு ஓடோடி வந்து கொண்டிருந்தது.

தரையைத் தொட்டும் தொடாமலும் குதித்துக் குதித்து ஓடி வந்து கொண்டிருந்தது. அது ஓடிய பக்கமெல்லாம் என் பார்வையும் திரும்பிக் கொண்டிருந்தது.

''அம்மே... அம்மே.... மே....!'' என்று கதறிக் கொண்டே கன்று ஓடிக் கொண்டிருந்தது.

அங்கேயே மேய்ந்து கொண்டிருந்த அதன் தாய், பெருங் குரலில், ''அம்ம்மே....!'' என்று பதில் கொடுத்தது.

வெகு வேகமாக ஓடிவந்த கன்று, தாயுடன் சேர்ந்து கொண்டது. தாய் அன்புடன் கன்றின் வெளுத்த உடலை நக்க ஆரம்பித்தது. தாயின் துணை கிடைத்தபின் கன்று, பேரானந்தத்துடன் குதித்துக் கும்மாளம் போட்ட இந்தக் காட்சியை என்னால் வெகு நேரம் பார்த்துக்



கொண்டிருக்க முடியவில்லை. எந்த நோக்க மும் இல்லாமல் அலைந்து கொண்டிருந்தேன்.

இப்பொழுது வாய்க்கால் நீரின் இனிய சல சலப்பு, காதுக்கு இன்பத்தைக் கொடுக்க வில்லை: பளபளத்துக் கொண்டிருந்த பசும் வயல் வெளி, மனத்தைக் கவரவில்லை.

அலைந்து கொண்டிருந்த மேகங்களும் உற் சாகத்தைக் கொடுக்கவில்லை.

இந்தக் காட்சியை நினைக்கும்போதே இனம் புரியாத சங்கடம் எழுந்தது.

அந்த நிகழ்ச்சி கண்ணிலேயே நிற்பது போல் தோன்றுகிறது

எதிர்பாராமல் வாரச் சாப்பாட்டு வீடுகள் ஏதாவது ஒன்றில் சாப்பாட்டுக்கு நேரமானால் நான் டாக்டர் வீட்டுக்குப் போவேன். டாக்டர் மனைவிக்கு என்னிடம் அபார அன்பு.

''சாப்பாடாயிற்று, அனந்து?''

இந்தக் கேள்வி, டாக்டர் மனைவியின் நெஞ்சாழத்திலிருந்து வருகிறது. நான் நிதானமாக, ''இல்லை'' என்று பதில் சொல் கிறேன். மறுபடியும் அந்த அம்மாள் அன்பு நிறைந்த நெஞ்சுடன், ''சாப்பிட வா, அனந்து !'' என்று அழைக்கிறார்கள்.

நான் மறுபேச்சில்லாமல் எழுந்து போய் முகத்தைக் கழுவிக் கொண்டு வந்து சாப்பிட உட்காருகிறேன். என் கூடவே அவர்கள் வீட்டுக் குழந்தைகளும் உட்காரு கிறார்கள். ஒவ்வொரு சமயம் டாக்டரும் உட்காருவார். குழந்தைகளுக்குப் பரிமாறும் அந்தக் கை, அதே அன்புடன் எனக்கும் பரிமாறும்.

சாப்பாடு எப்போதையும்விட ருசியாக வும் அமுதமாகவும் இருக்கும்.

உணவு பரிமாறிவிட்டுச் சாப்பிடுவதையே கவனித்துக் கொண்டிருக்கும் அந்த அம்மாள், ''வேறு வாரச்சாப்பாட்டு வீடுகளில் சாப்பாட் டுக்கு நேரமானால் நம்ம வீட்டுக்கு வந்துவிடு, அனந்து !'' என்கிறார் அன்பு கனிய.

நான் சாப்பிட்டுக் கொண்டே, ''ஆகட் டும்'' என்கிறேன். அந்த அம்மாள் தொடர்ந்து, ''பட்டினி மாத்திரம் கிடக்க வேண்டாம் அனந்து; இதை உங்கள் வீடு என்றே நினைத்துக் கொள்'' என்கிறார்.

அந்தச் சொல்லைக் கேட்டவுடன் எனக்கு என்னவோ மாதிரி ஆகிவிடுகிறது. எங்களுக் குள் ரத்தப் பிணைப்பு இருப்பது போன்ற ஓர் உணர்ச்சி ஏற்படுகிறது. ஒரு வேளை சென்ற பிறவியில் நாங்கள் தாயும் பிள்ளையு மாக இருந்தோமோ என்னவோ?

'கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் குட லுக்குத் தெரியாதா என்ன?'

இது போன்ற நாட்கள் எவ்வளவோ சென்று விட்டன.

'பட்டினி மாத்திரம் கிடக்க வேண்டாம் அனந்து. இதை உங்கள் வீடென்றே நினைத் துக் கொள்' என்று சொல்லும் அந்தத் தாயின் அன்புருவம் கண்ணில் கட்டினாற் போல் இருக்கிறது.

அப்பொழுது என் கண்கள் நீரைச் சொரிந்தன.

அந்த வாரம் நான் எங்கள் கல்லூரியின் கன்னட விரிவுரையாளருடைய வீட்டில் சாப் பிட்டுக் கொண்டிருந்தேன். பக்கத்து அறை யில் அவருடைய சிறிய மகள் பசுவைப் பற்றிய நூல் ஒன்றிலிருந்து (பசுவுக்கும், புலிக்கும் சம்வாதம்) ஒரு பாடலை மிக்க உணர்ச்சியுடன் படித்துக் கொண்டிருந்தாள்.

பாட்டின் மேல் என் கவனம் சென்றதால் சாப்பாடு நிதானமாக நடந்தது. விரிவுரை யாளரின் மனைவி, ''ஏனப்பா, இவ்வளவு மெதுவாகச் சாப்பிடுகிறாய்?'' என்று எச்சரித் தாள்.

''ஒன்றும் இல்லை... ஒன்றும் இல்லை'' என்று சொல்லிவிட்டு வேகமாகச் சாப்பிடத் தொடங்கினேன். திரும்பவும் பாட்டு என் கவனத்தைக் கவர்ந்தது.



''கன்றுகளை எண்ணிஎண்ணிக் கறவைப் பசுக் கொல்லாம்
காழ்த்துமணி கணகணவென் றொலித்திடவே களிமிக்கு
வெற்றிக் குதிபோட்டு வேகமிகப் பாய்ந்தோடி
மிதித்துத் தலைநிமிர்த்துக் கன்றுகளை மேவினவே.

''தங்கள் தாய்களைக் கண்ட கன்றுகள்
தாவிஅம் மாவென்று கொஞ்சித் தழுவினவே.''

இந்த வரிகள் என் மனத்தில் ஒரு பெரிய கிளர்ச்சியை உண்டாக்கிவிட்டன. கண்கள் பனித்தன. சாப்பாட்டு வேகம் குறைந்தது.

விரிவுரையாளரின் மனைவி மறுபடியும், "நீ இன்று என்னவோபோல் இருக்கிறாயே, அப்பா! சரியாகச் சாப்பிடு. சங்கோசம் வேண்டாம்" என்று பரிவோடு கூறினள்.

மறுபடியும் சாப்பாட்டு வேகம் அதிகரித்தது. காது மட்டும் பாட்டில் லயித்துவிட்டது.

"யார்முலைப் பாலைக் குடிப்பேன் அம்மா?
யாரை அண்டிப் பிழைப்பேன் அம்மா?
யாரை அணைத்துப் படுப்பேன் அம்மா?
யாரே எனக்கு ஆதாரம்?
...............................................?"

இந்த வரிகளைக் கேட்டபோது என்னால் அழுகையை அடக்க முடியவில்லை. கையிலிருந்த உணவில் இரண்டொரு சொட்டுக் கண்ணீர் விழுந்தது. சாப்பாட்டை அவசரம் அவசரமாக முடித்துக் கொண்டேன்.

"சிறிது சாதம் போட்டுக் கொள்ளப்பா!" என்று விரிவுரையாளரின் மனைவி வேண்டினள். 'வேண்டாம்' என்று சொல்லிவிட்டுப் பரபரவென்று கைகழுவிவிட்டு எழுந்துவிட்டேன். நானும் சிறு வயதில் பல முறை அந்தச் செய்யுளைப் படித்திருக்கிறேன். அப்பொழுதெல்லாம் எனக்கு அழுகை வரவில்லை.

ஆனால்.....

விரிவுரையாளரின் மகள் படிக்கக் கேட்டபோதுமட்டும் ஏனோ எனக்கு அழுகை வந்தது.

திரும்பத் திரும்ப நினைவுவரும் நிகழ்ச்சி. வாரத்தில் இரண்டு நாட்கள் தாசில்தார் வீட்டில் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன். ஒவ்வொரு நாளும் சாயங்காலம் அவர் வீட்டுக் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பேன். அதனால் என் செலவுக்குக் கொஞ்சம் பணமும் கிடைக்கிறது.

மாலையில் அவர் வீட்டுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கப் போகும்போதெல்லாம் குழந்தைகளிடம், "வாத்தியார் வந்திருக்கிறார். டிபன் கொண்டு வந்து கொடுங்கடா!" என்று தாசில்தார் மனைவி வாஞ்சையோடு சொல்வாள்.

நான் தவறாமல் டிபன் சாப்பிடுவதற்குச் சங்கடப்பட்டுக் கொண்டு நான், "வேண்டாம், வேண்டாம்" என்பேன்.

அப்போது அந்த அம்மாள் கடினமான அதட்டலுடன், "சும்மாச் சாப்பிடப்பா!" என்று கடிந்து கொள்வதுபோல் சொல்வாள்.

அந்த அம்மாள் எப்போதுமே இப்படித்தான் வற்புறுத்துவார்கள். பல தடவை அந்த அம்மாள், "தினந்தோறும் இங்கேயே சாப்பிட வாப்பா" என்று சொல்வார்கள். நான் சாப்பிடப் போகும் வார வீட்டுக்காரர் எல்லோருமே இப்படித்தான் சொல்வார்கள். ஆனால் எல்லாருமே எனக்கு வேண்டியவர்களாக இருந்ததால் நான் யார் வீட்டையும் விடமுடியவில்லை.

நான் டிபன் சாப்பிட்டுக் கொண்டே, "அம்மா, நீங்கள் டிபன் கொடுத்துக் கொண்டே இருந்தால் நான் உங்கள் வீட்டுக்கு வருவதை நிறுத்திக் கொள்ள வேண்டியதுதான்" என்பேன்.

உடனே அந்த அம்மாள் வருத்தத்துடன், "எங்கள் குழந்தைகளுக்காக நாங்கள் செய்கிறோம். உன்னையும் எங்கள் குழந்தைகளுள் ஒருவனாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். சாப்பிடப்பா" என்பார்கள்.

இந்தப் பேச்சுக்கு என்ன பதில் சொல்வதென்றே எனக்குப் புரியாது. நன்றிப் பெருக்கால் நெஞ்சு நிறைந்துவிடும். மறுக்காமல் கொடுத்த டிபனைச் சாப்பிட்டு விடுவேன்.

"உன்னையும் எங்கள் குழந்தைகளுள் ஒருவனாக நினைத்துக் கொண்டிருக்கிறோம்" என்று சொல்லும் அந்தத் தாயின் சொல் திரும்பத் திரும்ப நினைவுக்கு வருகிறது.

கர்ணன், குந்தி இவர்கள் சங்கமமா? அல்லது பதினான்கு ஆண்டுகள் வனவாசத்துக்குப் பிறகு அயோத்திக்குத் திரும்பிய ராமன், கௌசலை இவர்கள் சங்கமமா?

அன்று... அன்று... அவற்றைவிட உயர்ந்தது இந்தச் சங்கமம்.

அந்தச் சங்கமந்தான் இது:

நான் ஒரு நாள் பஸ்ஸில் வரப் போகும் ஒருவரை எதிர்பார்த்துக் கொண்டு பஸ் நிறுத்தும் இடத்தில் காத்திருந்தேன். பஸ்ஸுக்காகப் பிரயாணிகள் பலர் காத்திருந்தனர். பஸ்கள் வந்தன; போயின. மக்கள் ஏறினார்கள். இறங்கினார்கள். பஸ்கள் வந்து போகும் போதெல்லாம் கிளம்பிய புழுதி பஸ் ஸ்டாண்ட் எங்கும் நிறைந்துவிட்டது.

நான் காத்திருந்த ஆள் இன்னும் வந்து சேரவில்லை. வெய்யில் அதிகமாக இருந்ததால் அங்கேயே இருந்த கடையில் உட்கார்ந்து விட்டேன்.

இடையில் மற்றொரு பஸ் வந்து நின்றது. அதிலிருந்தும் பலர் இறங்கினார்கள். கடைசியில் எல்லாரும் இறங்கியபின் உயரமாகவும் திடகாத்திரத்துடனும் தோன்றிய ஓர் அம்மாள் பின்புற வழியாக இறங்கினள். அவள் கையில் பை ஒன்று இருந்தது.

நான், இருந்த இடத்தில் இருந்தே அந்த அம்மாளைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. முகத்தில் பிரயாணக் களைப்பு பளிச்சென்று தெரிந்தது. உடுத்த புடவையில் புழுதி அடையாகப் படிந்திருந்தது.

பஸ்ஸிலிருந்து இறங்கிய அந்த அம்மாள், ஒரு கணம் சுற்றுமுற்றும் பார்த்தாள். ஒருவேளை, 'எங்கே போவது?' என்பது அவளுக்குப் புரியாமல் இருந்திருக்கலாம்.

கடைசியில் ஏதோ தீர்மானத்துக்கு வந்தவளாக அந்த அம்மாள் நான் உட்கார்ந்திருந்த கடைக்கே வந்தார்கள்.

நெருக்கத்தில் அவள் முகத் தோற்றத்தைக் கவனித்தவர்கள், 'இவள் ஏதோ துக்கத்துக்கு ஆட்பட்டிருக்கிறாள்' என்று சொல்லிவிடலாம்.

வந்தவள் கண்களை அகல விரித்துச் சிறிது நேரம் என்னையே பார்த்தாள். அந்தத் திறந்த கண் பார்வை எதையோ ஆராய்வது போல் இருந்தது. அவளுக்கு வேண்டியது கிடைக்கவில்லை போலும். நீண்ட பெருமூச்சு ஒன்று அவளுடைய நெஞ்சின் ஆழத்திலிருந்து வெளி வந்தது.

அது வரையிலும் சும்மா இருந்த கடைக்காரர், "எந்த ஊர் அம்மா, நீங்கள்?" என்று கேட்டார்.

"எங்கள் ஊர் தாவணகிரி, அப்பா" என்றாள் அவள்.

கடைக்காரர், ''இங்கே என்ன காரியமாக வந்தீர்கள் ?'' என்று கேட்டார்.

விழி ஓரங்களில் ததும்பிய கண்ணீரை முன்றானையால் துடைத்துக் கொண்டே அவள் சொன்னாள். உள்ளத்தின் துயரத்தையே சுமந்து வந்ததுபோல இருந்தது அந்தப் பேச்சு.

''என்னன்னு சொல்லட்டுங்க. ஒரே-ஒரு மகன் இருந்தானுங்க. அவங்கப்பன் செத்தப் புறம் அவன்தான் என் உயிருக்கு உயிராக இருந்தானுங்க. மூணு வருஷம் ஆச்சுங்க. அவன் வீட்டை விட்டுப் போயி. அவன் எங்கே போனானோ தெரியலே. மூணு வருஷமா இப்படி அவனைத் தேடறேனுங்க'' என்றாள் அவள்.

கண்ணீர் பெருகிக் கன்னத்தில் இரண்டொரு தாரைகளை உண்டாக்கின.

விஷயத்தை அறிந்து கொள்ளும் ஆவலால் கடைக்காரர், '' ஏன் அவன் வீட்டை விட்டுப் போனான் ?'' என்று கேட்டார்.

அவள் சொன்ன பதில்: ''வருஷாந்திரப் பரீட்சையில் சேர்ந்தாப்போலே மூணுவருஷம் ஃபெயில் ஆயிட்டான், அப்பா! அதனாலே தான் இப்படி ஓடிப் போயிட்டான். அவங்க மாமன் பெண்ணைக் கொடுத்துக் கல்யாணம் பண்ணலாம்னு இருக்கான். வேண்டிய அளவு பணம் காசு கொடுப்பானுங்க. அவன் பரீட்சை பாஸானா என்ன? ஆகாட்டி என்ன? அவன் வீட்டுக்கு வந்தாப் போதும் எனக்கு. இருக்கிறது ஒரே மகன்.''

நடுவில் என்னைத் திரும்பிப் பார்த்த அவள், ''என் மகன் எல்லாத்திலேயும் இப் படித்தான் இருப்பானுங்க. எல்லாம் இப் படித்தான்'' என்றாள்.

கடைக்காரர் மறுபடியும், ''இப்பொழுது உங்க மகனைத்தான் தேடிக்கிட்டு வந்திருக் கீங்களா?'' என்று கேட்டார்.

''ஆமாங்க. உங்க ஊர் மெக்கடையிலே டவரா - டம்ளர் கழுவிக்கிட்டிருக்கான்னு சேதி கெடச்சுது. நாங்கள்ளாம் லிங்கதாரிங்க. என் மகன் மெக்கடையிலே டவரா டம்ளர் கழுவுறான்னு கேட்டா ரொம்பக் கஷ்டமா இருக்குதுங்க.''

அவளை மேலே பேச விடாமல் கடைக் காரர் உடனே, ''உங்க மகன் பேரென்ன ?'' என்று கேட்டார்.

''சிவானந்தம்.''

''சிவானந்தனா !''

''ஆமாங்க. ஆமாங்க.''

''சிவானந்தன்னு ஒரு பையன் அந்த ஹோட்டல்லே இருக்கான். கூப்பிட்டனுப்ப றேன். நீங்க கொஞ்சம் மறைவிலே உட் கார்ந்திருங்க.''

இப்படிச் சொல்லிய கடைக்காரர் சிவானந் தனை அழைத்துவர யாரையோ அனுப்பினார்.

சிறிது நேரத்தில் சிவானந்தன் கடைக்கு வந்தான். அவனைக் கண்டவுடன் அந்த அம் மாள் மகனை மார்போடு அணைத்துக் கொண் டாள்.

''சிவ, சிவ, என் மகனே! எவ்வளவு அலைக் கழித்துவிட்டாயப்பா! *இஷ்டலிங்கத்தை விட்டு விட்டு வந்துவிட்டாயல்லவா ? அதனாலே தான் இப்படிக் குரங்கு மாதிரி ஆக்கிட்டான். இந்தா லிங்கச் சம்புடத்தைக் கழுத்தில்



அவள்: திருடன் வந்திருக்கான் [illegible] விட்டு மிச்சம் வைத்த பக்ஷணங்கள் எல்லாவற்றையும் அவன் தின்றிருன்னு நினைக்கிறேன்!

அவர்: நீ தூங்கு. நிதானமா அவனைப் பிடிக்கலாம். வயிற்றுவலியால் துடிச்சுண்டு இங்கேதானே கிடக்கப் போறான்!

போட்டுக்கோ'' என்று சொல்லித் தன் கழுத்தில் போட்டுக் கொண்டிருந்த அவள் லிங்கச் சம்புடத்தைக் கழற்றி அவன் கழுத் தில் போட்டாள்.

மகனைத் திரும்பத் திரும்ப நெஞ்சாரத் தழுவிக் கொண்டாள். அவன் கன்னத்தைத் தடவிக் கொடுத்தாள். அவனுக்கும் மனத் தில் எவ்வளவு கஷ்டம் இருந்ததோ? தாயின் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அழுது தீர்த்தான்.

[புலிக்குப் பாதுஷாவானாலும் தல்லிக்கு (தாய்க்கு) பிட்டா (குழந்தை)தானே.]

இப்பொழுது தாயின் கண்கள் பளபளத் தன. ஆனந்தக் கண்ணீர் வழிந்தோடியது. சந்தோஷம் எல்லை மீறியது.

அந்தக் காட்சியைக் கண்ணால் பார்த்தால் தான் புரிந்து கொள்ள முடியும்.

புத்தகங்களில் படித்த கர்ணன் — குந்தி, ராமன் — கௌசலை; இவர்கள் ஒன்று சேர்ந் ததைவிட இந்தத் தாய் மகனுடைய ஜீவன் ததும்பும் ஒன்றிப்பு (சங்கமம்) மனத்தை உருக்கிவிட்டது.

'ஐயோ! என் தாயும் இருந்திருந்தால்...? இருந்திருந்தால்...? இப்படித்தான் என்னை அணைத்துக்கொண்டிருப்பாளோ என்னமோ?'

ஆனால் எனக்குத் தாய் இல்லை. பிறந்த சில நாட்களுக்குள்ளேயே தாயை இழந்துவிட்ட பாவி நான்.

நானும் என் தாயும் ஒன்றுசேர்வது சாத் தியமே இல்லை.

அதனால் என்ன? 'பட்டினி கிடக்க வேண் டாம் அனந்து. இதை உன் வீடென்றே நினைத்துக் கொள்' என்று உள்ளார்ந்த அன் புடன் டாக்டர். மனைவி சொல்லும்போதும், வாரச் சாப்பாட்டு வீடுகளின் தாய்மார்கள் அன்போடு ஒரு பிடி சோறு போடும்போதும், 'எங்கள் குழந்தைகளுள் ஒருவனாக உன்னையும் நினைத்துக் கொண்டிருக்கிறேன்' என்று தாசில்தார் மனைவி பாசம் ததும்பச் சொல் லும் போதும் எங்களுக்குள் தாய், மகன் சங்கமம் ஏற்படுகிறது.

கண்ணுக்குத் தெரியாத என் தாயை இந்தத் 'தாய்மார்களிடம் தெளிவாகக் கண்டு, தாய், மகனின் அபூர்வமான அன்பு இணைப்பை நான் அநுபவிக்கிறேன்.

தமிழாக்கம் : சீதாதேவி

* இஷ்டலிங்கம் : லிங்கதாரிகள் கழுத்தில் ஒரு வெள்ளிச் சம்புடத்தில் இஷ்டலிங்கத்தைச் சரடு ஒன்றில் கோத்து அணிவார்கள். இது எப்போதும் அவர்களுடைய கழுத்தில் இருக்கும். இதுவே இஷ்டலிங்கம்.

# வட்ட மேஜை

**நீ**ங்கள் 17-10-71 கல்கி இதழில் 'வாழை நார் ஓவியம்' என்ற தலைப்பில் என்னைப் பற்றி வெளியாகியுள்ள கட்டுரையில் எனது தந்தை பத்மநாப ஐயர் 'கண்ட்ரோலர்' பதவி வகித்தவர் எனத் தவறாகக் கூறப்பட்டுள்ளது. 'கண்ட்ரோலர்' பதவி வகித்தவர் என் தாத்தாவான சுப்பராயன் ஆவார். என் தந்தை மைசூர் அரசாங்கத்தில் வேலையிலிருந்து தற்போது ஓய்வு பெற்று பெங்களூரில் வசித்து வருகிறார்.

பெங்களூர்-19
25-10-71 அலமேலு

**எ**ன் நண்பர்கள் தமிழ்நாடு சுற்றுப்பயணத்தின்போது மதுரை மீனாட்சியம்மன் கோயிலுக்குச் சென்றனர். இவர்கள் சென்ற சமயம் நாதசுர வித்வான் இறைவன் சந்நிதானத்திலேயே ''ருப்தேரா மஸ்தானா'' போன்ற சினிமாப் பாடல்களை வாசித்துக் கொண்டிருந்தாராம்! ''சினிமாப் பாடல்கள் வாசிக்கக் கோயில்தானா கிடைத்தது? கோயிலுக்குச் செல்வதே கவலைகளையும், வெளி உலகையும் மறக்கத்தானே? உங்கள் தமிழ்நாட்டுக் கோயில்களின் புனிதம் இவ்வளவுதானா?'' என்று கேட்டனர். தலைகுனிந்து நின்றேன்.

பெங்களூர்-4,
6-10-71 எல். நடராஜன்

**க**ல்கி 24-10-71 இதழில் 'ஜனாதிபதிகள் உகுத்த ஜோக்குகள்' என்ற தலைப்பில் ரூஸ்வெல்ட் கூறிய ஜோக் ஒன்றை வெளியிட்டிருக்கிறீர்கள். அதன் கீழ் பிராங்க்ளின்-டி-ரூஸ்வெல்ட்டின் படத்தை வெளியிட்டிருக்கிறீர்கள். அந்த ஜோக்கைச் சொன்னவர் பிராங்க்ளின் ரூஸ்வெல்ட் அல்ல. அவருக்கு முன்பு ஜனாதிபதியாக இருந்த அவருடைய உறவினர் தியோடர் ரூஸ்வெல்ட்.

மேல்விஷாரம்
24-10-71 டி. சுப்பிரமணியம்

## இக்கட்டான நிலை விடுபட்ட கலை!

**ப**ஸ் போக்குவரத்துப் பணியாளர்களுக்கும் மாணவர்களுக்கும் மோதல். கண்ணாடிக் குப்பிகள் பல வீசி எறியப்பட்டன. போலீஸ்காரர்கள் கண்ணீர்ப் புகையை விட்டுக் கூட்டத்தைக் கலக்கப் பாடுபட்டுக் கொண்டிருந்தார்கள். இந்தக் கலவரத்தைப் படம் எடுக்க முன்னணியில் நின்று கொண்டிருந்தார் 'ஹிந்து' பத்திரிகையின் போட்டோகிராபர் திரு நாராயணசாமி.

''திடீரென்று துப்பாக்கி வெடிக்கும் சத்தம் கேட்டது. நான் ராணுவத்தில் சேவை செய்து பழக்கமானவன். வெடிச் சத்தம் கேட்டதும் குப்புறப் படுத்துக் கொண்டேன். 'முதுகின் மேல் ஏதாவது பட்டுவிட்டுப் போகட்டும்' என்று தைரியமாக அந்தக் கலவரக் காட்சியைப் படுத்தபடியே படம் எடுத்தேன். இந்தத் தருணத்தில் காலிலே அடி பட்டுவிட்டது. உயிரைத் திருணமாக மதித்து முன்னணியில் நின்று படம் எடுத்ததற்காக 'ஹிந்து' ஆசிரியர் ஸ்ரீ கஸ்தூரி எனக்கும் பரிசுத்தொகை வழங்கிக் கௌரவித்தார்!'' என்று அந்த இக்கட்டான தருணத்தைச் சமாளித்த விதத்தைக் கூறுகிறார் போட்டோகிராபர் ஸ்ரீ நாராயணசாமி.

* * *

**ம**ற்றொரு சம்பவம். அரியலூரில் ரயில் விபத்து ஏற்பட்டதல்லவா? அதைப் படம் பிடிக்கக் காரில் விரைந்தார் புகைப்பட நிபுணர் சாமி. பல இடங்களில் உடைப்பெடுத்திருந்தது. ஆகவே, விபத்து நடந்த இடத்துக்கு ஓட்டமும் நடையுமாகச் சென்றார் சாமி. ரயில் நிலையத்தில் இரவு முழுவதும் கொட்டக் கொட்ட விழித்திருந்து மறுநாள் அதிகாலையில் ரயில் கவிழ்ந்த இடத்துக்குப் போனார். ரயில்பெட்டிகள் விழுந்த இடத்துக்குப் போகமுடியாத நிலை. 'எப்படி உடைந்த பெட்டிகளைப் போய்ப் படம் எடுப்பது?' என்று தவித்தார்.





அந்தச் சமயம் டெலிபோன் ரிப்பேர் செய்ய ஒருவர் கயிற்றைக் கட்டிக் கீழே இறங்கிக் கொண்டிருப்பதைக் கண்டார் திரு சாமி. புகைப்படக் காமிராவை முதுகோடு கட்டி ஒரு கையால் எடுத்துக் கொண்டு, மறு கையால் கயிற்றைப் பிடித்துக் கொண்டு லாகவமாகக் கீழே இறங்கி விபத்து நடந்த இடத்துக்குப் போய் உடைந்த ரயில் பெட்டிகளையெல்லாம் படம் எடுத்தார்.

''அது ஆபத்தான காரியம் தான். படம் எடுக்க வேண்டும் என்ற ஆசை, எதையும் கடக்கக் கூடிய தைரியத்தைத் தந்து விடுகிறது. பல மைல்கள் நடந்து காருக்கு வந்து சென்னை சேர்ந்து படம் பத்திரிகையில் வெளியானதைக் கண்டபோது பட்ட அத்தனை சிரமங்களும் பறந்து போய் விட்டன!'' என்கிறார் புகைப்பட நிபுணர் ஸ்ரீ சாமி. — குன்றிமணி

# தேசத்தை முன்னேற்றப்பாதையில் இயக்கிச் செல்லும் சக்கரங்கள்

சக்கரங்கள் பல தொழில்களை இயக்குகின்றன. உதாரணமாக, ரயில்கள் கிராமங்களையும் நகரங்களையும் இணைக்கின்றன; விற்பனைச்சரக்குகளை மார்க்கெட்டுகளுடன் இணைக்கின்றன; நாட்டின் ஒவ்வொரு பகுதியையும் மற்றப் பகுதிகளுடன் இணைக்கின்றன. டாடாவின் தண்டவாளங்கள், எஃகுச்சக்கரங்கள் மற்றும் ஆக்ஸில்கள் மக்களையும், பொருள்களையும் இப்பரந்த நாட்டின் பல்வேறு இடங்களுக்கும் கடத்திச் செல்லுகின்றன.

நாட்டின் முன்னேற்றத்திற்கான இணைப்புத் துறையில் எஃகு ஈடற்ற முக்கியத்துவம் வகிக்கிறது. உறுதியான உழைப்பு, உபயோகம் மற்றும் பணமுதலீட்டின் முழு மதிப்பையும் கிடைக்க வழி செய்வதில் அது ஈடு இணையற்றது.

அக்காரணத்தினால்தான் நாங்கள் ஏராளமான நேரம், உழைப்பு மற்றும் பணம் இவற்றை டாடாவின் முத்திரையுள்ள பொருள்களை மேலும் மேலும் சீராக்குவதில் செலவிடுகிறோம்

இந்தியப் பொருளாதாரத்தை சீராக்க ஊக்கமளிப்பது டாடா ஸ்டீல்.

**டாடா ஸ்டீல்**



Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



பழமையானது!
...ஆனால் என்றுமே
பசுமையான
அன்பின் சின்னம்!!

# சிங்கார்



நவநாகரிக நங்கையரின் தொல்வழி முறை அழகு சாதனத்தின் ஒரே தன்னிகரற்ற பெயர்

பாரமவுண்ட் ப்ராடக்ட்ஸ், பம்பாய்-31.

மதிமயக்கும், மனங்கவரும், மகிழ்வூட்டும், மலைப்பளிக்கும்—உரு. எனினும் எச்சூழ்நிலையாலும் கால மாறுபாடுகளாலும் பாதிக்கப்படாத உண்மை உரு. இன்பத் தேன்சிந்தும் இதயம்—கனி மொழி-பேசும் விழிகள்—மென்மையான அரவணைப்பு—பொறுமையின் சின்னம்—அறிவின் வடிவம்...

இதுவே பெண்மை. குழப்பமிகு காலங்களிலும் கவலைமிகு வேளைகளிலும் ஆடவரின் இதயத்திற்கு இதமளிக்கும் அமைதி ஊற்று

இதுவே பெண்மை. இப் பெண்மையின் இன்றியமையாத என்றுமே மாறாத மறையாத இரு சின்னங்களே... புடவை—குங்குமம்.

இவற்றின் சங்கமமே பெண்மை. இவற்றில் ஒன்றை இங்கே சமர்ப்பிக்கிறோம். உலகத்தின் மங்கையர் குலத்திலேயே மங்காப் புகழ் பெற்ற—கனிவமான மென்மையான பாரதப் பெண் குலத்தின் பாதங்களில் சமர்ப்பிக்கிறோம்.

